தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# மோதல்களை தவிர்க்கவும்



Tamil

இந்த உலகம் மோதல்களினால் உருவானது.
அதனால் மோதல்களை தவிர்க்கவும்.




தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# மோதல்களை தவிர்க்கவும்

நிருபென் அவர்களால் தொகுக்கப்பட்டது மற்றும்
பின்பற்றுபவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.




**பதிப்பாளர் :** திரு. அஜீத்.சி.படேல்
தாதா பகவான் விக்ஞான் பௌண்டேஷன்
1, வருண் அப்பார்ட்மெண்ட், 37,ஸ்ரீமாலி சொசைட்டி
நவ்ரங்பூரா காவல் நிலையம் அருகில்,
நவ்ரங்பூரா, அஹமதாபாத் - 380009
குஜராத், இந்தியா.
**தொலைபேசி** : +91 79 3500 2100

தாதா பகவான் பௌண்டேஷன்
5, மம்தாபார்க் சொசைட்டி,
பி/எச், நவ்குஜராத் கல்லூரி,
உஸ்மான்பூரா, அஹமதாபாத் - 380014
குஜராத், இந்தியா.
ஈ-மெயில் : info@dadabhagwan.org
**தொலைபேசி** : +91 70 3500 2100


**உள்நோக்க மதிப்பு :** மிகுந்த பணிவு மற்றும் "நான் யாதொன்றும் அறியேன்" என்ற விழிப்புணர்வு.

**விலை** : ரூ.20

**முதல் பதிப்பு** : நவம்பர் 2022 (500 பிரதிகள்)

**பிரிண்டர்** : அம்பா மல்டிபிரிண்ட்,
பி-99, எலக்ட்ரானிக்ஸ், ஜி.ஐ.டி.சி.,
கே-6 ரோடு, செக்டர் - 25.
காந்திநகர் - 382044
தொலைபேசி : +91 79 3500 2142

**ISBN/eISBN** : 978-93-91375-26-3
Printed in India

# த்ரிமந்திரம்





நமோ வீதராகாய
நமோ அரிஹந்தானம்
நமோ சித்தானம்
நமோ ஆயரியானம்
நமோ உவஜ்ஜாயானம்
நமோ லோயே சவ்வ சாஹுனம்
ஏசோ பஞ்ச நமுக்காரோ
சவ்வ பாவப்பனாசணோ
மங்களானம் ச்ச சவ்வேசிம்
பதமம் ஹவயி மங்களம்
ஓம் நமோ பகவதே வாசுதேவாய
ஓம் நம சிவாய
ஜெய் சச்சிதானந்தம்





## தாதா பகவான் என்பவர் யார்?

ஜூன் 1958, சுமார் மாலை ஆறு மணிக்கு, சூரத் ரயில் நிலையத்தில், சலசலப்புக்கு மத்தியில் ஒரு பெஞ்சில் அம்பாலால் முல்ஜூபாய் பட்டேல் அமர்ந்திருந்தார். அப்போது தாதா பகவான் அம்பாலால் அவர்களின் புனிதமான உடலுக்குள் முழுமையாக வெளிப்பட்டார். ஆன்மீகத்தின் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்வை இயற்கை வெளிப்படுத்தியது! ஒரு மணி நேரத்திற்குள் பிரபஞ்சத்தின் தரிசனம் அவருக்கு வெளிப்படுத்தப்பட்டது! நாம் யார்? கடவுள் என்பவர் யார்? உலகை இயக்குபவர் யார்? கர்மா என்றால் என்ன? மோட்சம் என்றால் என்ன? போன்ற அனைத்து ஆன்மீக கேள்விகளுக்கு முழுமையான தெளிவு கிடைத்தது.

அன்று மாலையில், அவர் அடைந்த ஞானத்தை தனது பிரத்தியேக விஞ்ஞான ஆய்வு முறை (ஞானவிதி) மூலம் மற்றவர்களுக்கு இரண்டே மணி நேரத்தில் ஞானம் வழங்கினார். இதை அக்ரம் பாதை என்று குறிப்பிடப்படுகிறது. க்ரம் என்றால் ஒன்றின் பின் ஒன்றாக மேலே ஏறுவது அதாவது படிப்படியாக ஏறுவது, ஆனால் அக்ரம் என்றால் படி இல்லாத எளிதான, லிப்ட் பாதை.

தாதா பகவான் யார் என்பதை அவர் மற்றவர்களுக்கு விளக்கி கூறுவது என்னவென்றால், உங்கள் முன்னால் தெரிபவர் தாதா பகவான் அல்ல நான் ஞானி புருஷ், என்னுள் “பதினான்கு உலகங்களுக்கும் அதிபதியான தாதா பகவான் வெளிப்பட்டு இருக்கிறார்”. அவர் உங்களின் உள்ளும் உள்ளார். அனைவரின் உள்ளும் உள்ளார். ஆனால் அவர் உங்களினுள் வெளிப்படாமல் இருக்கிறார். இங்கு (ஏ.எம்பட்டேல் அவர்களின் உள்) முழுமையாக வெளிப்பட்டு இருக்கிறார். நான் இறைவன் (பகவான்) அல்ல. என்னுள் வெளிப்பட்டிருக்கும் தாதா பகவான் அவர்களை நானும் தலை வணங்குகிறேன்.

## இந்த மொழிப்பெயர்ப்பு பற்றிய குறிப்பு

அம்பாலால் எம் பட்டேல், பொதுவாக தாதா ஸ்ரீ அல்லது தாதா என்று அழைக்கப்படும் ஞானி புருஷ் அவர்கள், ஆன்மீக ஆர்வலர்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதில் வடிவில் ஆன்மீக சொற்பொழிவுகளை வழங்கினார்.

இந்த சொற்பொழிவுகள் பூஜ்ய டாக்டர் நிரூபென் அமீன் அவர்களால் பதிவு செய்யப்பட்டு குஜராத்தி மொழியில் புத்தகங்களாக தொகுக்கப்பட்டது. தாதாஸ்ரீ தனது சத்தசங்கம் மற்றும் ஆத்ம அனுபவ விஞ்ஞானத்தை பற்றிய ஞானத்தை, வார்த்தைக்கு வார்த்தை மற்ற மொழிகளில் மொழிப்பெயர்ப்பது சாத்தியமில்லை. ஏனெனில் சில அர்த்தங்கள் அதில் இழகக் நேரிடும் என்று கூறியுள்ளார். எனவே அக்ரம் விஞ்ஞானம் மூலம் ஆத்ம அனுபவத்தை துல்லியமாக புரிந்து கொள்வதற்காக குஜராத்தி கற்க வேண்டியதன் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார். இருப்பினும் தாதாஸ்ரீ தனது சொற்பொழிவை பிற மொழிகளில் மொழிபெயர்க்க தனது ஆசீர்வாதங்களை வழங்கினார். ஏனென்றால் ஆன்மீகத்தை பற்றி கண்டறிய விரும்புபவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு பயனடைந்து, பின்னர் தங்கள் சொந்த முயற்சியின் மூலம் முன்னேறி விடுவார்கள்.

இந்தப் புத்தகம் நேரடி மொழிபெயர்ப்பு அல்ல அவரது மூல முதலான சொற்பொழிவு சாரத்தை பாதுகாக்க அதிக கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

ஆன்மீக சொற்பொழிவுகள் குஜராத்தில் இருந்து தொடர்ந்து மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன.

சில குஜராத்தி வார்த்தைகளின் அர்த்தத்தை வெளிப்படுத்துவதற்கு பல மொழி பெயர்க்கப்பட்ட வார்த்தைகள் அல்லது வாக்கியங்கள் தேவைப்படுகின்றன. எனவே, குஜராத்தி வார்த்தைகளை சிறந்த புரிதலுக்காக

மொழிபெயர்க்கப்பட்ட உரைக்குள் தக்க வைக்கப்பட்டுள்ளன.

குஜராத்தி வார்த்தையை முதன்முறையாக பயன்படுத்தப்பட்ட இடத்தில் அதை சாய்வாக எழுதி அதைத் தொடர்ந்து அடைப்புக் குறிக்குள் அதன் அர்த்தத்தை விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது. பின்வரும் உரையில் குஜராத்தி வார்த்தை மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டு மடங்கு நன்மைகளை வழங்குகிறது. முதலாவதாக மொழிபெயர்ப்பின் எளிமை, வாசிப்பதற்கு மற்றும் இரண்டாவதாக இந்த ஆன்மீக விஞ்ஞானத்தை நன்றாக புரிந்து கொள்வதற்கு, முக்கியமான குஜராத்தி வார்த்தைகள், வாசகருக்கு பரிச்சயமாகிறது.

சதுர அடைப்பு குறிக்குள் இருக்கும் உள்ளடக்கம், விஷயத்தின் கூடுதல் தெளிவை அளிக்கிறது. இது குஜராத்தி உள்ளடக்கத்தில் இல்லை.

தாதாஸ்ரீ அவர்களின் ஞான சாரத்தை உலகிற்கு முன் வைக்கும் பணிவான முயற்சி இது. இந்த மொழிப் பெயர்ப்பை படிக்கும் போது ஏதேனும் முரண்பாடு இருந்தால், அது மொழி பெயர்ப்பாளர்களின் தவறு மட்டுமே, விஷயத்தைப் பற்றிய தெளிவான புரிதலை வாழும் ஞானியிடம் தெளிவுபடுத்தி கொள்ள வேண்டும்.

****

## தலையங்கம்

மோதல்களைத் தவிர்க்கவும்; இந்த ஒரு வாக்கியம் ஒருவரது வாழ்க்கையில் சந்தேகத்திற்கு இடமின்றி புரிந்துவிட்டால், பிறகு ஒருவரின் உலக வாழ்க்கை நிச்சயமாக மகிழ்ச்சி ஆகி விடும், மற்றும் மோட்சமும் தானாகவே அடைய பெறுவார். இது ஒரு மறுக்க முடியாத கருத்து.

மிக்க மதிப்பிற்குரிய விஞ்ஞானி தாதாஸ்ரீ அவர்களின் இந்தக் கொள்கையை ஏற்று எண்ணற்ற மக்கள் மேம்படுத்தப்பட்டுள்ளனர்! அவர்களின் வாழ்க்கை அமைதியும் மகிழ்ச்சிகரமாகமாறி, அவர்கள் மோட்சத்தைப் பின் தொடர்பவர்களாகியுள்ளனர்.

அத்தகைய நிலையை அடைய, “நான் யாருடனும் மோத விரும்பவில்லை என்று உறுதியான தீர்மானத்தை எடுப்பதுதான். மற்றவர் மோதலைத் தொடங்க கடுமையாக முயற்சித்தாலும், நான் கண்டிப்பாக மோதலில் எந்த விதத்திலும் ஈடுபடமாட்டேன், என்று உறுதியுடன் இருப்பவர் இயற்கையாகவே மோதல்களைத் தவிர்க்க உள்ளிருந்து நுண்ணறிவைப் பெறத் தொடங்குவார்.

நீங்கள் இரவில் இருட்டு அறையை விட்டு வெளியேறும்போது, நடுவில் சுவரில் மோதிக் கொண்டால், நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் சுவரை எட்டி உதைத்து, “நீ ஏன் என் வழியில் வந்தாய்? எனக்கு வழியை விடு, இது என் வீடு,” என்று கூறிவீர்களா, மாறாக, நீங்கள் புத்திசாலித்தனமாக கதவைத் தேடி வெளியில் போகும் வழியை தேடுவீர்கள். அப்போது ஏன் அப்படி செய்கிறீர்கள்? ஏன் என்றால் அங்கு நீங்கள் பிடிவாதமாக இருந்தால், உங்கள் தலையை சுவரில் இடித்துக் கொள்வீர்கள் என்கிற புரிதல் உங்களுக்கு இருப்பதினால்.

ஒரு மன்னன் ஒரு குறுகிய பாதையில் நடந்து சென்று கொண்டிருந்தால், வழியில் ஒரு காளை

சீறிப்பாய்ந்து கொண்டிருந்தால், ராஜா அந்த காளையிடம், "எனக்கு வழியை விடு, இது என் ராஜ்யம், இது எனது பாதை என்று கூறினார் என்றால், காளை அதற்கு, "நீ அரசனாக இருக்கலாம், ஆனால் நான் தான் பேரரசன்! என்னை எதிர்கொள்!" என்று பதிலளிக்கும். அதனால் அங்கே, ஒரு வலிமைமிக்க ராஜா கூட வழியை விட்டு விலகி சாலையோரத்தில் ஒதுங்கி நின்று கொள்வார். எதற்காக? மோதலை தவிர்ப்பதற்காக.

இந்த எளிய எடுத்துக்காட்டுகள் மூலம், மோதலுக்கு வருபவர்களை சுவர் மற்றும் காளை போன்றவர்கள் என்பதை ஒருவர் புரிந்து கொள்ள வேண்டும். எனவே, நீங்கள் மோதல்களைத் தவிர்க்க விரும்பினால், புத்திசாலித்தனமாக வழியை விட்டு வெளியேறி விடவும். எல்லாச் சூழ்நிலைகளிலும் மோதல்களைத் தவிர்க்கவும். வாழ்க்கை மோதல் இல்லாமலும் மற்றும் மோட்சமும் அடைய முடியும்.

- டாக்டர் நிருபென் அமீன்

# மோதல்களை தவிர்க்கவும்

## மோதலுக்கு இடமளிக்காதீர்கள்....

‘யாருடனும் மோதல்களை ஆரம்பிக்காதீர்கள், மோதல்களை தவிருங்கள். என்னுடைய இந்த வாக்கியத்திற்கு நீங்கள் உண்மையில் மதிப்பளித்தால், நீங்கள் மோட்சம் அடைந்து விடுவீர்கள். உங்களுடைய பக்தி மற்றும் என்னுடைய வார்த்தைகளின் சக்தி எல்லா வேலைகளையும் பூர்த்தி செய்துவிடும். இங்கு தேவை உங்களின் தயார்நிலை மட்டுமே. என்னுடைய இந்த ஒரு வாக்கியத்தை மட்டும் பின்பற்றினாலே, அது ஒருவரை மோட்சத்துக்கு அழைத்துச் செல்லும். நீங்கள் என்னுடைய ஒவ்வொரு வார்த்தையும் முழுமையாக உள்வாங்கிக் கொண்டால், பின் மோட்சம் உங்கள் கைகளில். ஆனால் அப்படியே உள்வாங்கிக் கொள்ளுங்கள். என்னுடைய ஒரு வார்த்தையை ஒரு தினத்திற்கு பின்பற்றினால், உங்களுக்கு அளவற்ற ஆற்றல் உண்டாகும். உங்களுக்குள் இருக்கும் அளவற்ற ஆற்றல்களினால் எல்லாவிதமான மோதல்களையும் தீர்வு காண முடியும், மற்றவர்கள் எப்படிப்பட்ட மோதலை உண்டாக்கினாலும், சுய அழிவுப்பாதையில் விரும்பிச் செல்லும் ஒருவருடன் மோதல் போக்கில் இருப்பீர்களா? அத்தகைய ஒருவர் தானும் மோட்சம் அடையாமல் நீங்கள் உங்களுடைய மோட்சத்திற்கும் தடையாக இருப்பார். எப்படி அதை பொறுத்துக் கொள்ளமுடியும்? நீங்கள் மோட்சமடைய வேண்டுமெனில் அத்தகைய நபர்களிடம் அதிபுத்திசாலியாக நடந்து கொள்ளாதீர்கள். எல்லா பக்கங்களிலிருந்தும் உங்களை தற்காத்துக் கொள்ளுங்கள், இல்லையேல் எவ்வளவு முயற்சித்தாலும் இந்த சிக்கலுக்குள் இருந்து வெளியே வரமுடியாது. அதனால் கருத்து மோதல் இல்லாமல் அவரிடமிருந்து விலகிவிடுங்கள். நாங்கள் என்ன கூற விரும்புகிறோம் என்றால் உங்கள் மோட்சத்துக்கான ரயில் வண்டி, நடைமேடையை விட்டு கிளம்பத் தயாராகும் சமயம், உங்கள் கால்சட்டை முள் கம்பியில் சிக்கிக்

கொண்டால், கால் சட்டையை பிரித்தெடுக்க காத்துக் கொண்டு இருக்காதீர்கள்! கால் சட்டையை கழற்றி விட்டு அப்படியே ஓடிவிடுங்கள். இந்த உலகத்தின் சூழலில் ஒரு நொடி கூட சிக்கிக் கொள்வது உசிதமல்ல. பிறகு எதைப் பற்றி பேசுவதற்கு என்ன இருக்கிறது? நீங்கள் எங்கெல்லாம் சிக்கிக் கொள்கிறீர்களோ அங்கே உங்களது உண்மை சொரூபமான ஆத்மாவை மறந்து விடுகிறீர்கள்.

நீங்கள் தவறுதலாக யாருடனும் மோதிக் கொண்டால், அதற்கு தீர்வு காணுங்கள். சர்ச்சையின் தீப்பொறியிலிருந்து அமைதியாக விலகி செல்லுங்கள்.

## போக்குவரத்து விதிமுறையால் விபத்துகள் தடுக்கப்படும்.

நீங்கள் ஒரு சாலையில் நடக்கும் போது, எப்படி மிகவும் கவனத்துடன் நடந்து செல்கிறீர்கள்! மற்றபடி, வேறொருவர் எவ்வளவு மோசமானவராக இருந்தாலும், மற்றும் அவர் உங்களிடம் மோதி தீங்கு விளைவிப்பது என்பது வேறு விஷயம். இருப்பினும், யாருக்கும் தீங்கு செய்ய கூடாது என்ற உள் நோக்கம் உங்களுக்கு இருக்க வேண்டும். நீங்கள் அவருக்கு தீங்கு செய்ய முயற்சித்தாலும், உங்களுக்குத்தான் தீங்கு உண்டாகும். எனவே, ஒவ்வொரு மோதலிலும், இரு தரப்பினரும் பாதிக்கப்படுகின்றனர். நீங்கள் யாரையாவது துன்பப்படுத்தினீர்கள் என்றால், கண்டிப்பாக அதே சமயத்தில் நீங்களும் வேதனைப்படுவீர்கள்!

எனவே, இந்த போக்குவரத்து விதிகளை உதாரணமாக எடுத்து காட்டியிருக்கிறேன். சாலை விதிகள் எப்படி என்றால், நீங்கள் யாருடனாவது மோதினால், நீங்கள் உயிரிழந்து விடுவீர்கள். மோதலில் ஆபத்து உள்ளது. ஆகையால், யாருடனும் மோதாதீர்கள். அதே போல், உலக விவகாரங்களிலும் மோதல்களில் ஈடுபடாதீர்கள். எனவே, மோதல்களைத் தவிர்க்கவும். மோதல்களில்

அபாயம் உள்ளது. அதனால் யாருடனும் மோதலில் ஈடுபடாதீர்கள். அதைப் போலவே உலக விஷயங்களிலும் மோதல் போக்கில் ஈடுபடாதீர்கள்.

எப்போதுமே மோதலில் அபாயம் உள்ளது. மேலும், எப்பொழுதாவது தான் மோதல் நிகழ்கிறது, மற்றபடி, ஒரு மாதத்தில் இருநூறு முறை நிகழ்கிறதா என்ன? ஒரு மாத காலத்தில் எத்தனை முறை நிகழ்கிறது?

**கேள்விகேட்பவர்** : சில நேரங்களில் இரண்டிலிருந்து நான்கு முறை

**தாதாஶ்ரீ** : ஆம் அந்த அளவிற்கு நீங்கள் தீர்வு காண வேண்டும். நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால், நீங்கள் ஏன் அழிவை நோக்கிச் செல்கிறீர்கள்? மற்றவருடனான நட்பினை அழிப்பது உங்களுக்கு பொறுந்தகூடியதல்ல. இங்கே எல்லோரும் சாலை போக்குவரத்து விதிகளை முறையாகக் கடைபிடிக்கிறார்கள், அல்லவா? அவரவர் தன் இஷ்டப்படி வண்டி ஓட்டுகிறார்களா என்ன? ஆனால் இங்கே அவரவர் புரிதலுக்கேற்றவாறு நடந்து கொள்கிறார்கள்! இங்கே விதிகளே இல்லையா? யாருக்கும் எந்த பிரச்சனையும் ஏற்படாதவாறு அற்புதமாக போக்குவரத்து விதிகள் வகுக்கப்பட்டுள்ளது. நீங்கள் அவ்விதிகளை புரிந்து, கீழ்படிந்து நடந்தால் உங்களுக்கு கஷ்டமில்லை. அதாவது இந்த விதிகளைப் புரிந்து கொள்வதில் தவறுகள் நிகழ்கிறது. இந்த விதிகளை விவரிப்பவருக்கு, அவ்விதிகள் பற்றிய முழுமையான புரிதல் இருக்க வேண்டும்.

நீங்கள் இந்த போக்குவரத்து விதிகளை முறையாக பின்பற்ற வேண்டும், என்ற தீர்க்கமான முடிவை எடுத்திருப்பதால், எவ்வளவு நன்றாக அதை கடை பிடிக்கிறீர்கள்! ஏன் உங்கள் அஹங்காரம் அப்பொழுது தலைதூக்கி, "அவர்கள் என்ன வேண்டுமானாலும் கூறிவிட்டு போகட்டும், நான் என் போக்கிலே தான் செல்வேன்" என

கூற மறுக்கிறது? ஏனென்றால் உங்களின் புத்திக்கு விபத்தில் தெளிவாகத் தெரியக்கூடிய, "கைகள் வெட்டுப்படும், நான் அவ்விடத்திலேயே இறந்துவிடுவேன்" போன்ற விளைவுகளின் புரிதல் இருக்கிறது. ஆனால் ஒருவருக்கு, 'நான் கருத்து மோதலில் ஈடுபட்டால், நான் உயிரிழப்பேன்' என்கிற புரிதல் இல்லை. இதை பற்றிய விழிப்பு இல்லை. இது அறிவாற்றலுக்கு அப்பாற்பட்டது. இது ஒரு நுட்பமான விஷயமாகும். மோதல்களினால் ஏற்படும் இழப்புகள் எல்லாம் நுட்பமானதாகும்.

## இந்த கோட்பாடு முதல்முறையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

இந்த சொற்றொடரை 1951ம் ஆண்டில் ஒருவருக்கு கொடுத்தேன். அவர் இவ்வுலக வாழ்க்கையான பிறவிப் பெருங்கடலை கடந்து செல்ல வழி என்ன என்று கேட்டார். நான் அதற்கு "மோதல்களை தவிருங்கள்" என்று அவருக்குப் புரியும்படி விவரித்தேன். நான் ஒரு நாள் வேதத்தின் ஒரு புத்தகத்தை வாசித்துக் கொண்டிருக்கும் போது அவர் என்னிடம் வந்து 'தாதா' எனக்கு சிறிது அறிவு வழங்குங்கள் என்று கூறினார். அவர் என்னிடம் பணியாற்றுபவர். அதனால் நான் அவரிடம் கூறினேன். "என்ன அறிவை உனக்கு நான் வழங்க முடியும்? நீ எப்பொழுதும் எல்லோருடனும் சண்டையிட்டுக் கொண்டே இருக்கிறாய்!" என்று. ரயிலில் பயணம் செய்யும் போது கூட அடிதடியில் ஈடுபட்டு விடுவார். சாதாரண நேரத்தில் பணத்தை விரயம் செய்வார். ஆனால் ரயிலில் பயணம் செய்யும்போது பயணச் சீட்டு வாங்காமல் பயணிப்பதோடு மட்டுமல்லாமல் சண்டையும் இடுவார். எனக்கு இவையனைத்தும் தெரியும். அதனால் நான், "உனக்கு கற்பிப்பதால் என்ன நன்மை விளையப் போகிறது? நீதான் எல்லோருடனும் மோதலில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கிறாயே" என்று கூறினேன். அவர் அதற்கு "தாதா நீங்கள் எல்லோருடனும் பகிரும் இந்த அறிவிலிருந்து

ஏதாவது கற்றுக் கொடுங்கள்" என்று கூறினார். நான் கேட்டேன், "நான் உனக்கு கற்பிப்பது என்ன நன்மை செய்துவிடும்? நீ தினமும் சண்டை சச்சரவால் ஈடுபடாமல் ரயிலில் சென்று வா". ரயிலில் சரக்கு சாமான்களை ஏற்ற ஒரு பத்து ரூபாய் கட்டணம் விதிக்கப்படுகிறது, இருப்பினும் அவர் அந்த கட்டணத்தை கூட செலுத்தாமல் பயணம் செய்து அதற்கு மாறாக இருபது ரூபாய் செலவு செய்து மற்றவர்களுக்கு டீயும், சிற்றுண்டியும் வாங்கிக் கொடுப்பார். அதில் சந்தோஷமும் அடைவார். அதனால் அவர் உண்மையில் பத்து ரூபாயை சேமிக்காமல் அதற்கு மாறாக மேலும் பத்து ரூபாய் செலவு செய்யும் 'உன்னத' மனிதர் அவர்.

அதனால் அவர் மீண்டும் என்னைக் கேட்டார் "சிறிது அறிவையாவது கற்பியுங்கள்" என்று. "நீ தினமும் சண்டை போட்டு வருவாய் நான் அதை தினமும் கேட்க வேண்டுமா? அவர் தொடர்ந்து "இருந்தாலும் கூட சிறிதளவு அறிவையாவது வழங்குங்கள்" என்றார். அதற்கு நான், "ஒரே ஒரு வாக்கியத்தை மட்டும் நீங்கள் பின்பற்றும் பட்சத்தில் தருகிறேன்" என்றேன். அவர் கூறினார். "நான் கண்டிப்பாக பின்பற்றுவேன்" என்று. நான் அதற்கு "யாருடனும் மோதலில் ஈடுபடாதீர்கள்" என்று. அவர் கேட்டார் "மோதல் என்றால் என்ன? தயவு கூர்ந்து இதை விவரியுங்கள் தாதா" என்றார்.

நான் கேட்டேன் "நீங்கள் ஒரு நேரான பாதையில் நடக்கிறீர்கள் எதிரே ஒரு விளக்கு கம்பம் (மின் கம்பம்) நடுவில் இருக்கிறது நீங்கள் அந்த கம்பத்தில் சென்று மோதுவீர்களா அல்லது விலிகிச் செல்வீர்களா? என்று. அவர் அதற்கு "இல்லை நான் மோதினால் என்னுடைய தலையில் அடிபட்டு விடும்" என்றார். நான் தொடர்ந்தேன், "ஒரு எருமை மாடு உங்களை நோக்கி வந்தால், நீங்கள் விலகிச் செல்வீர்களா? அல்லது மோதுவீர்களா? என்று. "நான் அதனுடன் மோதினால், என்னை அது காயப்படுத்திவிடும் அதனால் நான் விலகிச் செல்வேன்"

என பதிலளித்தார். நான் மேலும் கேள்விகள் கேட்டேன் “ஒரு பாம்பு உன் வழியில் வந்தால்? ஒரு பெரிய பாறை உன் வழியில் வந்தால்?” என்று. அதற்கும் அவர் “நான் அவற்றிலிருந்து விலகிச் செல்வேன்” என்றார். நான் கேட்டேன் “யார் விலகிச் செல்ல வேண்டும்?” என்று. அவர் கூறினார் “நான் தான் விலகிச் செல்ல வேண்டும்” என்று “ஏன்” என்று வினவினேன். “எனது நன்மைக்காக நான் அவற்றுடன் மோதினால். எனக்கு அடிபட்டு விடும்” என்றார்! நான் அதற்கு “இந்த உலகில் வாழும் சில மனிதர்களிலும் சிலர் பாறையைப் போலவும், சிலர் எருமையைப் போலவும், சிலர் பசுவைப் போலவும், சிலர் மனிதனைப் போலவும், சிலர் பாம்பினைப் போலவும், சிலர் துருவங்களைப் போலவும், பலவகையான மனிதர்கள் உள்ளனர். இப்போது நீ மோதலில் ஈடுபடாதே. உன் பாதையில் அதற்கு தக்கவாறு முன்னேறிச்செல்லுங்கள்.

இந்த புரிதலை நான் அவருக்கு 1951ல் வழங்கினேன். இன்று வரை கூட அதிலிருந்து நிலை மாறவில்லை. அதன் பிறகு யாருடனும் மோதலில் ஈடுபடவிலல்லை. இவரது மாமா என்கிற, வியாபாரி ஒருவர், ‘இவர் மோதலில் ஈடுபடுவதை தவிர்த்துவிட்டார்’ என்றறிந்து வேண்டுமென்றே இவருக்கு கோபத்தை மூட்டுவார். இவரது மாமா ஒரு வழியில் கோபமூட்டினால், இவர் வேறு மாற்று வழியில் போய்விடுவார். எதுவும் அவரை தீண்ட அனுமதிக்கவில்லை. 1951க்கு பிறகு அவர் யாருடனும் சண்டையிடவில்லை.

## இவ்வழியில் உலகத் தொடர்புகளில் மோதல்களை தவிருங்கள்

நீங்கள் ரயிலில் இருந்து இறங்கியவுடன் சுமை தூக்குபவரை, “ஏய்... இங்கே வா, வா இங்கே!” இரண்டிலிருந்து நான்கு சுமை தூக்குபவர்கள் ஓடி வருவார்கள் “வா இங்கே, இதை தூக்கு”. உங்கள் சாமானர்களை எல்லாம் அவர் சுமந்த பிறகு அவருடன்

சச்சரவில் ஈடுபடுவீர்கள், “நான் ஸ்டேஷன் மாஸ்டரை அழைப்பேன், இவ்வளவு பணம் கேட்கிறாயா நீ? நீ இப்படி செய்தாய், நீ அப்படி செய்தாய்....” என்றெல்லாம் நீங்கள் கூறுவீர்கள். அட முட்டாள், இங்கே போய் மோதலில் ஈடுபடாதே. அவர் இருபத்தைந்து ரூபாய் கேட்டால், நீ அவரிடம் வற்புறுத்தி “உண்மையில் இது பத்து ரூபாய் தான். ஆனால் நீங்கள் இருபது ரூபாய் வாங்கிக் கொள்ளுங்கள்” என்று கூறியும். அவர் விடுவதாக இல்லை என்றறிந்த பிறகு, கூடவோ குறையவோ கொடுத்து தீர்வு காணுங்கள். அங்கே மோதலில் ஈடுபடாதீர்கள். மேலும் நீங்கள் அவரை வருத்தமடைய செய்தால், உங்களை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அவர் வீட்டிலிருந்து மோசமான மனநிலையில் வந்திருக்கலாம், அப்படியிருக்க நீங்கள் மேலும் அவரை தூண்டினால், அவர் ஒரு கத்தியை கூட உங்கள் மீது நீட்டலாம். ஒரு காளையைப் போல பிடிவாதமாக உங்களை காயப்படுத்தலாம். அவர் 33 சதவீதம் மனிதனாகவும் 32 சதவீதம் எருமை மாடாகவும் இருக்கக் கூடும்.

ஒருவர் உங்களிடம் (கூச்சலிட்டு) வார்த்தைகள் அணுகுண்டைப் போல வந்ததென்றால், நீங்கள் அப்பொழுது மோதலை தவிர்க்க வேண்டும் என்று தெரிய வேண்டும். உங்களுடைய மனதில் எந்த பாதிப்புகளும் இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஏதோ ஒரு பாதிப்பு திடீரென எழுந்தால், நீங்கள் உணர்ந்து கொள்ளவேண்டும் மற்ற மனிதரின் பாதிப்புகள் உங்களுக்குள் பிரதிபலித்திருக்கிறது என்று. அதனால் நீங்கள் விலகிச் செல்ல வேண்டும். அவை எல்லாமே மோதல்கள். இதைப் புரிந்து கொண்டால் நீங்கள் மேலும் வரக்கூடிய மோதல்களை தவிர்க்கலாம். மோதல்களைத் தவிர்ப்பதால், மோட்சம் அடையலாம்.

இந்த உலகம் உண்மையில் மோதல்களால் உருவானது; அது அதிர்வலைகளாகத் தோன்றியுள்ளது. அதனால் மோதல்களை தவிருங்கள். இந்த உலகமே

மோதல்களால் தான் உருவானது. இத்துடன் பகவான், இவ்வுலகம் பகைமையினாலும் தோன்றியது என்கிறார். எல்லா மனித இனமும், சொல்லப்போனால் எல்லா உயிரினமும் பழிவாங்கும் தன்மையை கொண்டுள்ளது. தீவிர மோதல் ஏற்பட்டால், பழிவாங்கும் தன்மை உண்டாகாமல் இருக்காது. பின் ஒரு பாம்போ, தேளோ, எருமையோ, எருதோ, எதுவாக இருந்தாலும் பழிவாங்கும் தன்மையை கொண்டுள்ளது. இது ஏனென்றால் எல்லாவற்றிலும் சிருஷ்டித்து இருப்பது ஆத்மா தான். ஆத்ம சக்தி அனைத்திலும் சமமானது. இது அனாத்மாவின் (புத்கல்) பலவீனத்தால் ஒருவர் இதை தாங்கிக் கொள்ள வேண்டியுள்ளது. அப்படி பொறுத்துக் கொள்ளும் போது பழிவாங்கு தன்மையின்றி இருக்கமாட்டார். பிறகு, அவர் அடுத்த பிறவியிலும் பழி வாங்காமல் இருக்கமாட்டார்!

ஒருவர் அளவிற்கு அதிகமாக பேசி, என்ன சொன்னாலும் உங்களுக்குள் மோதலை வளரவிடாமல் செய்வது உங்கள் தார்மீகக் கடமை ஆகும். அந்த பேச்சு எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அந்த பேச்சு மோதல்களை உண்டாக்குவது போல் உள்ளதா? இந்த மாதிரியான ஆட்கள் மறுநாள் காலை வரை சண்டையிடுவார்கள். மற்றவருடன் மோதல் போக்கில் குறுக்கிடுவது மிகப் பெரிய குற்றமாகும். அதற்கு மாறாக, மோதலை தவிர்க்கும் விதமாக பேசுவது; மனித இனத்தின் அடையாளம்.

## சகித்துக் கொள்ளவேண்டுமா? இல்லை, தீர்வு காணவேண்டும்

**கேள்வி கேட்பவர்** : தாதா, மோதல்களை தவிர்க்க வேண்டும் என்று கூறுகிறீர்கள், அப்படியானால் நாம் சகித்துக் கொள்ள வேண்டுமா?

**தாதாஸ்ரீ** : மோதல்களை தவிர்ப்பது என்பது சகித்துக் கொள்ள வேண்டுமென்ற அர்த்தம் அல்ல. நீங்கள் சகித்துக்

கொண்டாலும், உங்களால் எவ்வளவு சகித்துக் கொள்ளமுடியும். சகித்துக் கொள்வதென்பது ஒரு சுருள்வில்லை (ஸ்பிரிங்) அழுத்தி வைப்பது போன்றதாகும். எவ்வளவு காலம் சுருள்வில்லை அழுத்தி வைக்க முடியும்? அதனால் கண்டிப்பாக சகித்துக் கொள்ள பழகவேண்டாம், தீர்வு காண கற்றுக் கொள்ளுங்கள். அறியாமை நிலையில், ஒருவர் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும். பிறகு ஒரு நாள், அழுத்தி வைக்கப்பட்ட சுருள்வில் எதிர்வினையாகி நிறைய சேதங்களை ஏற்படுத்தி விடும். இது இயற்கையின் நியதியாகும்.

இவ்வுலகில் யார் ஒருவரையும் சகித்துக் கொண்டுதான் போக வேண்டும் என்பது சட்டமல்ல. மற்றவர்களுக்காக சகித்துக் கொண்டு போக வேண்டி வருவது உங்களின் கர்ம கணக்குகளினால். எனினும் உங்களுக்கு தெரியாது எந்த கர்மக் கணக்கிலிருந்து இந்தப் பங்கு வந்தது என்று, அதனால் ஏதோ புதிய கர்மா உங்களை நோக்கி வந்து விட்டது என்று எண்ணிக் கொள்கிறீர்கள். புதியதாக உங்களுக்கு யாரும் எதையும் கொடுக்க முடியாது; நீங்கள் கடந்த காலத்தில் எதை கொடுத்தீர்களோ அதுவே திரும்பப் பெறப்படுகிறது. ஆத்ம ஞானத்தில் இது போல பொறுத்துக் கொள்ளும் கருத்து இல்லை. ஆத்ம ஞானத்தின் மூலமாக "அந்த நபரும் ஒரு சுத்தாத்மா. எனக்கு நிகழ்வதெல்லாம் எனது கர்மாவின் வெளிப்பாடு, அந்த நபர் எனது கர்மாவை வெளிப்படுத்தும் நிமித் மட்டுமே". பின்னர் இந்த ஞானம் தான் உங்கள் புதிருக்கு விடையளிக்கும்.

**கேள்வி கேட்பவர்** : அப்படியானால் நான் 'எனது கர்மத்தின் பங்கு தான் திரும்ப பெறப்படுகிறது' என்று தீர்மானத்திக் கொள்ள வேண்டுமா?

**தாதாஸ்ரீ** : அந்த நபரும் ஒரு சுத்தாத்மா தான், இது அவரின் பிரக்ருதி (அனாத்மாவின் குணஇயல்பு) இந்த பிரக்ருதி அதன் பலனை கொடுக்கிறது. நீங்கள் மற்றும்

அந்த நபர் இருவருமே சுத்தாத்மா தான். உங்கள் இருவருக்கும் இடையே உள்ள கணக்குகளை தீர்த்துக் கொள்கிறீர்கள். நமது பிரக்ருதியின், கர்மா வெளிப்படுத்தப்பட்டால், மற்றவர் நமக்கு கணக்கையே அளிக்கிறார். அதனால் தான் 'நாங்கள்' சொல்கிறோம், "இது கர்மாவின் வெளிப்பாடு, அந்த நபர் ஒரு கருவி மட்டுமே" அவர் உங்களுக்கு அந்த கணக்கை கொடுக்கும் போது, உங்கள் கர்மக் கணக்கு தீர்ந்து விடுகிறது. இந்த புரிதல் இருக்கையில், நீங்கள் பொறுத்துக் கொள்ளத் தேவையில்லை!

இப்படி தெளிவு உண்டாகாமல் நீங்கள் சகித்துக் கொண்டு இருந்தால் என்னவாகும்? ஒரு நாள் சுருள்வில் திரும்பி எம்பிக் குதிக்கும். அப்படி எம்பிக் குதிக்கும் போது பார்த்திருக்கிறீர்களா? என்னுடைய சுருள்வில் பலமுறை எம்பிக் குதிக்கும். பல நாட்கள் பொறுமையாக இருப்பேன். பின் ஒத்துழைக்க முடியாமல் போகும் போது, ஒரு புயலையே கிளப்பி விடுவேன். இது நான் அறியாமையின் நிலையில் இருந்தது; என்பது தெரியும். இது நான் கவனமான விழிப்புணர்வில் கண்டது. அதனால் தான் நான் கூறுகிறேன், "சகித்துக் கொள்ளப் பழகாதீர்கள்". அது அறியாமையின் நிலையில் செய்வது. இங்கே நீங்கள் "இதன் விளைவுகள் என்ன, இதன் பின்னால் உள்ள காரணங்கள் என்ன" என்பதை தெளிவுபடுத்தி; உங்கள் கர்மக் கணக்குகளை முறையாக சரிபார்க்க வேண்டும். கர்ம கணக்குகளை மீறி எதுவும் நடக்காது.

## உங்கள் மோதல்களுக்கு, உங்கள் தவறுகளே காரணம்

இந்த உலகில் உங்களுக்கு ஏற்பட்ட எந்த மோதலுக்கும் நீங்களே காரணம்; அது வேறு நபரின் தவறல்ல. எப்படியானாலும் அந்த நபர் உங்களுடன் மோதப் போகிறார். "ஏன் மோதினாய்?" என்று கேட்டால், அதற்கு அவர் "ஏனென்றால் அவர் என்னுடன் மோதினார்!"

என்று பதிலளிப்பார். ஆகையால், நீங்கள் மட்டும் பார்வை இழந்ததோடு அல்லாமல், அவரும் பார்வை இழந்துவிடுகிறார்.

**கேள்வி கேட்பவர்** : நாம் மோதலுக்குள் மோதல் உருவாக்கினால் என்ன நிகழும்?

**தாதாஶ்ரீ** : உங்கள் தலையை உடைத்துக் கொள்வீர்கள்! ஒரு மோதல் உருவானால், நீங்கள் என்ன புரிந்து கொள்ள வேண்டும்?

**கேள்வி கேட்பவர்** : அது உண்மையில் என் தவறு தான்.

**தாதாஶ்ரீ** : ஆம், அதை உடனே ஒத்துக் கொள்ள வேண்டும். ஒரு மோதல் உருவானால், அப்பொழுது உங்களுக்கு மனதில் ஒரு விழிப்புணர்வாக வேண்டும் "மோதல் உருவாகும் விதத்தில் நான் என்ன பேசினேன்?" என்று. நீங்கள் உங்கள் தவறை உணர்வதே புதிருக்கான விடையாகும். அதை விடுத்து நீங்கள் மற்றவரின் மீது தான் தவறு என்று நிருபிக்க முயற்சித்துக் கொண்டே இருந்தால், புதிருக்கு விடை தெரியாது. 'இது என்னுடைய தவறுதான்' என்று ஏற்றுக் கொண்டால் இவ்வுலகிலிருந்து மோட்சம் கிடைக்கும். இதை தவிர வேறு எந்த தீர்வும் இல்லை. மற்ற எல்லா தீர்வுகளும் சிக்கலை ஏற்படுத்தும், மற்றும் உள்ளே மறைந்திருக்கும் அஹங்காரத்தின் வாயிலாக விடை தேடிக் கொண்டிருக்கும். ஏன் தீர்வு காண எண்ணுகிறீர்கள்? ஒருவர் உங்கள் தவறை சுட்டிக் காண்பித்தால், "நான் எப்பொழுதும் இப்படி குழப்பமானவன்" என்று கூறுங்கள்.

அறிவாற்றலே, இவ்வுலக வாழ்வில் மோதல் ஏற்படச் செய்கிறது. நீங்கள் உங்கள் மனைவியின் பேச்சை கேட்டு நடந்தால் கூட துன்பம் விளைகிறது, மோதல் ஏற்படுகிறது. அது 'மிஸ் புத்தியின்' வேலை! நீங்கள் 'அவள்' சொல்வதை கவனித்தால் எங்கே தூக்கி எரியப்படுவீர்கள் என்று தெரியாது! 'அவள்' அதிகாலை இரண்டு மணிக்கு

கூட உங்களை எழுப்பி எதிர்மறையானவற்றை காண்பிக்கலாம். நீங்கள் உங்கள் மனைவியிடம் குறிப்பிட்ட நேரங்களில் மட்டுமே இருக்கிறீர்கள், ஆனால் புத்தி என்பது எப்போதுமே உங்களுடன் இருக்கும். உங்களை 'சிம்மாசனம்' இழக்கச் செய்வது இந்த புத்தி தான்.

நீங்கள் உண்மையில் மோட்சமடைய நினைத்தால், புத்தி கூறுவதை கேட்காதீர்கள். புத்தி எத்தகையது என்றால், அது 'ஞானி புருஷ் அவர்களின் தவறுகளை கூட சுட்டிக்காட்டும். ஹே! உங்களுக்கு மோட்சம் கிடைக்க உதவிடும் அந்த மனிதரின் குறையை கண்டுபிடிப்பீர்களா? அப்படியானால், உங்கள் மோட்சம் பல பிறவிகளுக்கு ஒத்தி வைக்கப்படும்!

மோதல்கள் உங்களின் அஞ்ஞானம் தான். நீங்கள் யாருடன் மோதினாலும், அது அஞ்ஞானத்தின் அடையாளமே. கடவுள் என்பவர் சரியா, தவறா என்று பார்க்க மாட்டார். யார் என்ன பேசி இருந்தாலும் பரவாயில்லை. மோதல் உண்டாகிவிட்டதா? இல்லையா? என்று தான் கடவுள் பார்ப்பார். அதற்கு பதில் 'இல்லை' என்றிருந்தால், "இது தான் எனக்குத் தேவை" என்பார் கடவுள். கடவுளைப் பொறுத்தவரை சரி, தவறு என்பது கிடையாது. மக்கள் தான் இக்கருத்தில் ஆர்வம் செலுத்துகிறார்கள். கடவுளை பொறுத்தவரை, இருமை என்பதே இல்லை!

## மோதுபவர்கள் எல்லாம் சுவர்களே

ஒரு சுவருக்குள்ளே நீங்கள் நுழைந்தால் அது சுவரின் தவறா அல்லது, உங்கள் தவறா? நீங்கள் சுவரிடம் நியாயம் தேட நினைத்து, "விலகிப் போ, விலகிப் போ" என்று கூறி "நான் உனக்குள் நுழைந்து தான் செல்வேன்" என்றால், அடிபடப் போவது யார் தலை.

**கேள்வி கேட்பவர் :** என்னுடைய தலை.

**தாதாஶ்ரீ** : அப்படியானால் யார் கவனமாக இருக்க வேண்டும்? அந்த சுவருக்கு என்ன ஆயிற்று? இதில் யாருடைய தவறு இருக்கிறது? அடிபட்டவரே தவறு செய்தவர் ஆகிறார். இந்த உலகமும் ஒரு சுவருதான்.

நீங்கள் சுவரின் மீது மோதினால், சுவரின் கருத்தோடு பிரிவினை ஏற்படுமா? ஒரு சுவருடனோ அல்லது கதவுடனோ மோதினால் அவைகளுடன் கருத்து வேறுபாடால் பிரிவினை ஏற்படுமா?

**கேள்வி கேட்பவர்** : கதவு ஒரு உயிரற்ற ஜடப்பொருள், அல்லவா!

**தாதாஶ்ரீ** : அப்படியானால் ஒரு உயிரினத்துடன் மோதல் ஏற்பட்டால், அவர் உங்களுடன் மோதினார் என்று நம்புகிறீர்கள். இவ்வுலகில் மோதிக் கொள்ளும் அனைத்தும் உயிரற்ற ஜடப்பொருள். மோதலும் உயிரற்றது. உயிருள்ளவை மோதுவதில்லை; உயிரற்றவையே மோதுகிறது. அதனால் நீங்கள் உடனேயே அவர்களை சுவர்கள் என்று கருத வேண்டும், அதற்கான அர்த்தம் என்ன வென்றால், அவர்களுடன் நீங்கள் மோதலில் ஈடுபடக் கூடாது. சிறிது நேரம் கழித்து, "வாருங்கள், சிறிது தேநீர் பருகலாம்", என்று கூற வேண்டும்.

ஒரு குழந்தை உங்கள் மீது கல்லை எரிந்து ரத்தம் வழிந்தோடுகிறது. அப்பொழுது அந்தக் குழந்தையிடம் எப்படி நடந்து கொள்வீர்கள்? நீங்கள் அந்த குழந்தையிடம் கோபம் கொள்வீர்கள். ஆனால் ஒரு பாறை, மலை உச்சியிலிருந்து உங்கள் மேல் விழுந்து, இரத்தம் வழிகிறது அப்போது என்ன செய்வீர்கள்? உங்களுக்கு கோபம் வருமா? இல்லை, ஏன் அப்படி? ஏனென்றால் அந்த பாறை, மலை மீதிருந்து விழுந்தது! மற்றும் அந்த குழந்தையும் தான் செய்ததை எண்ணி மன உளைச்சல் அடைந்திருக்கலாம், ஆனால் நாம் அதை

பொருட்படுத்துவதில்லை. அதே சமயம் பாறை, மலை மேலிருந்து உருண்டு விழ யார் பொறுப்பு?

அதனால், இந்த உலகத்தை புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் என்னிடம் வந்தால், உங்களை கவலையற்ற மனிதராக்கி இந்த உலகில் உங்களுக்கு அற்புதமாக வாழ வழி செய்வேன். மேலும் உங்கள் மனைவியுடன் உலா வரலாம்! உங்கள் குழந்தைகளுக்கு எவ்வித கவலையுமில்லாமல் திருமணம் செய்து வைக்கலாம்! உங்கள் மனைவியும் மகிழ்ச்சியடைவார். அவர் கண்டிப்பாக என்னிடம் வந்து “நான் சொல்லியே ஆகவேண்டும்! நீங்கள் என் கணவரை புத்திசாலி ஆக்கிவிட்டீர்கள்!” என்பார்.

ஒருவேளை இப்போது உங்கள் மனைவி பக்கத்து வீட்டாருடன் சண்டை போட்டு கடும் கோபத்தில் உள்ளார். அந்த சமயம் நீங்கள் வீட்டிற்கு வரும் போது அதே கோபத்தில் உங்களுடன் பேசுகிறார், அப்போது என்ன செய்வீர்கள்? நீங்களும் கடுமையாக கோபப்படுவீர்களா? இது போன்ற சூழ்நிலை வரும் போது நீங்கள் அனுசரித்துச் செல்ல வேண்டும். சொல்ல முடியாது அவர் எத்தகை சூழலில் கடுங்கோபமடைந்தார், அல்லது யார் மீது கோபம் அடைந்தார் என்று. அங்கே ஒரு குடும்ப தலைவனாக நீங்கள் அங்கே கருத்து வேறுபாடு கொண்டு பிரிவினையை வளர்க்காதீர்கள். கருத்து வேறுபாட்டின் காரணமாக பிரிவினை உண்டானால் அது உங்களிடமே திரும்ப வரும். கருத்து வேறுபாட்டால் வரும் பிரிவினை எது என்றால் அது தான் மோதல்!

## புரிந்து கொள்ள வேண்டிய விஞ்ஞானம்

**கேள்வி கேட்பவர்** : எனக்கு யாருடனும் மோத விரும்பவில்லை, ஆனால் யாரோ ஒருவர் வந்து சண்டையை ஆரம்பித்தால் நான் என்ன செய்வது?

**தாதாஸ்ரீ** : நீங்கள் இந்த சுவருடன் மோத விரும்பினால், எவ்வளவு நேரம் மோதுவீர்கள்? உங்கள் தலையை சுவற்றில் மோதிக் கொண்டால் அதற்கு என்ன செய்வீர்களா? நீங்கள் தலையை மோதிக் கொண்டது என்பதன் அர்த்தம் நீங்கள் சுவற்றுடன் சண்டையிட்டுக் கொண்டீர்கள் என்பதாகும், அதற்கு நீங்கள் திரும்ப திரும்ப சுவற்றில் மோதுவீர்களா? அதே போல் நிறைய சண்டையைத் தூண்டுபவர்கள் சுவருக்கு சமானம்! ஏன் மற்றவரை பார்க்கிறீர்கள்? நீங்கள் அவர்களை சுவர்கள் என்று புரிந்து கொள்ள வேண்டும். அதன் பின் பிரச்சனை என்பதே இல்லை.

**கேள்வி கேட்பவர்** : நான் அமைதியாக இருந்தால், மற்ற நபர் 'இவர் கண்டிப்பாக தவறு செய்திருக்கிறார்' என்று தவறாக நினைத்து இன்னும் அதிக மோதலில் ஈடுபடுவார்.

**தாதாஸ்ரீ** : உண்மையில், நீங்கள் 'நான் அமைதியா இருந்ததால் இது நடந்தது' என்று கருதுகிறீர்கள். ஒருவர் நடு இரவில் எழுந்து கழிவரைக்குச் செல்லும் போது இருட்டில் சுவரோடு மோதிக் கொள்கிறார் என்றால், அது அவர் அமைதியாக இருந்ததால் மோதிக் கொண்டாரா?

நீங்கள் பேசினீர்களா அல்லது அமைதியாக இருந்தீர்களா என்பது முக்கியமல்ல, மற்றும் அதற்கு தொடர்பில்லை நீங்கள் அமைதியாக இருந்ததாலோ, அல்லது பேசியதாலோ மற்றவர் பாதிக்கப்படுகிறார் என்பது எதுவுமில்லை. இது அறிவியல் சூழ்நிலை ஆதாரத்தினால் நிகழ்கிறது. வேறு யாருக்கும் இதில் சிறிதளவு கூட அதிகாரமில்லை. சிறிதளவு கூட அதிகாரமில்லாத இந்த உலகில் யார் என்ன செய்ய முடியும்? அப்படி அந்த சுவருக்கு அதிகாரமிருந்திருந்தால் இந்த மனிதருக்கும் அதிகாரம் இருந்திருக்கும்! அந்த சுவரைத் திட்ட உங்களுக்கு அதிகாரமிருக்கிறதா? அதுபோல் மற்றவர்களை திட்ட உங்களுக்கு அதிகாரமில்லை. இந்த நிமித் மூலம் உங்களுக்கு மோதல் ஏற்படப் போவதை

யாரும் தவிர்க்க முடியாது. அதனால் தேவையில்லாத கூச்சலும் குழப்பமும் ஏன்? இதில் மற்றவரின் சுயகட்டுப்பாட்டுக்கு உட்பட்டதல்ல! அதனால் நீங்கள் ஏன் ஒரு சுவரை போல் இருக்கக் கூடாது! நீங்கள் உங்கள் மனைவியை திட்டும் போது, அவருக்குள் இருக்கும் கடவுள், 'இவர் என்னை திட்டுகிறார்'! என கணக்கு வைத்துக் கொள்வார். பின் அவர் உங்களைத் திட்டும் போது, நீங்கள் சுவரைப் போல ஆகிவிடுங்கள். அப்போது உங்களுக்குள் இருக்கும் கடவுள், உங்களுக்கு உதவி செய்வார்.

எனவே, உங்கள் மீது தவறுள்ள போது தான் சுவற்றோடு நீங்கள் மோதுகிறீர்கள். அது சுவரின் தவறல்ல. அதனால் மக்கள் என்னை கேட்பதுண்டு "இந்த மக்களெல்லாம் சுவர்களா?" என்று. அதற்கு நான், "ஆம், மக்களும் உண்மையில் சுவர்கள் தான்," என்று கூறுவேன். நான் அதை பார்த்ததால் கூறுகிறேன். இது ஆதாரமற்றது அல்ல.

ஒருவரோடு கருத்து வேறுபாடு கொண்டு பிரிவினை உண்டாவதும், சுவரோடு மோதிக் கொள்வதும் ஒன்றுதான், இவை இரண்டுக்கும் வித்தியாசம் இல்லை. ஒருவர் சுவரோடு மோதுகிறார் என்றால் அவர் பார்க்க முடியாததினால். அதுபோல் தான் ஒருவர் பார்க்கமுடியாத போது தான் கருத்து வேறுபாடு கொண்டு பிரிவினையும் உருவாகிறது. அவர் (சூழ்நிலைக்கு) அப்பால் பார்க்க முடிவதில்லை. மேற்கொண்டு, அவரால் தீர்வு காண முடியாததால் கருத்து வேறுபாட்டினால் பிரிவினை ஏற்படுகிறது. சூழ்நிலைக்கு அப்பால் பார்க்க முடியாததால் கோபம், பெருமை, கபடம், பேராசை எழுகிறது! இந்த விஷயத்தை புரிந்து கொள்ள வேண்டுமல்லவா? தவறு அடிபட்டவரின் மீதே; அந்த சுவரின் மீது தவறிருக்கிறதா? அதனால் இந்த உலகில் எல்லாமே ஒரு சுவர் தான். நாம் ஒரு சுவரோடு மோதும் போது, யார் சரி, யார் தவறு என்று நிறுவப்படுவதற்காக நாம் போராட மாட்டோம், அல்லவா?

'நான் தான் சரி' என்று சண்டையின் சிக்கலுக்குள் போக மாட்டோம், அல்லவா? அதே போல்தான் இப்பொழுது இந்த மனிதரும் ஒரு சுவரின் நிலையில் உள்ளார். நீங்கள் சரியானவர் என்று எந்த விதத்திலும் நிரூபிக்கத் தேவையில்லை.

உங்களுடன் மோதும் யாரையும் ஒரு சுவராக நீங்கள் கருதவேண்டும். பிறகு நீங்கள் கதவு எங்கே இருக்கிறது என்று ஆராய்ந்தால், இருட்டிலும் கூட கதவை கண்டுபிடித்து விடலாம். நீங்கள் முன்னோக்கி கைகளை நீட்டி அசைத்துக் கொண்டே நடந்தால் கதவு இருப்பதை கண்டுபிடித்து விடலாமில்லையா? அங்கிருந்து தப்பித்து விடவேண்டுமில்லையா? யாருடனும் மோதக் கூடாது என்பதை நீங்கள் சட்டமாக்கிக் கொள்ளவேண்டும், அதாவது உங்களுக்கு யாருடனும் மோதலில் ஈடுபட விருப்பமில்லையென்று.

## இப்படித்தான் வாழ்க்கையை வாழ வேண்டும்

மக்களுக்கு வாழ்க்கை எப்படி வாழவேண்டும் என்று தெரிவதில்லை. மக்களுக்கு திருமணத்தைப் பற்றி எதுவுமே முன்கூட்டியே தெரிந்து வைத்திருப்பதில்லை, இருப்பினும், வேறு வழியில்லாமல் திருமணம் செய்து கொள்கின்றனர்! ஒருவருக்கு, எப்படி ஒரு நல்ல தகப்பனாக இருக்க வேண்டும் என்று தெரியாமலேயே, தகப்பனாகி விடுகிறார். இப்போது ஒருவர் குழந்தைகள் மகிழ்ச்சியாக இருக்கும் வகையில் வாழ வேண்டும். எல்லோரும் காலையில் எழும் போதே "இன்று யாருடனும் மோதலில் ஈடுபடக் கூடாது", என்று தீர்மானித்துக் கொள்ளவேண்டும். மோதலினால் என்ன லாபம் அடைந்தீர்கள் என்று எனக்குக் காட்டுங்கள். என்ன நன்மை விளைந்தது?

**கேள்வி கேட்பவர் :** நாம் பாதிக்கப்படுகிறோம்.

**தாதாஸ்ரீ :** நீங்கள் பாதிப்படைந்தது மட்டுமல்ல, தற்போது மோதலினால் பாதிப்படைந்தது மட்டுமல்லாமல், உங்கள்

நாள் முழுவதும் பாழாகி, மேலும் அடுத்த பிறவியில் மனிதப் பிறவியை இழக்க நேரிடும். நல்லொழுக்கம் இருந்தால் தான் மனிதப் பிறவி தொடரும். ஆனால் மிருகத்தனமாக மற்றவரை தூண்டிவிட்டுக் கொண்டு, தனது 'கொம்புகளால்' மற்றவரை தாக்கிக் கொண்டிருந்தால், மனிதப்பிறவி திரும்பக் கிடைக்குமா? மாடுகளும். எருமைகளும் கொம்புகளினால் மற்றவர்களை தாக்குமா அல்ல மனிதர்கள் தாக்குகிறார்களா?

**கேள்வி கேட்பவர்** : மக்கள் அதிகமாகச் செய்வதாக தெரிகிறது.

**தாதாஸ்ரீ** : ஒரு மனிதர் அப்படி செய்தால் என்றால், அவர் மிருகக் கதியில் பிறக்க வேண்டி வரும். அங்கே, அவருக்கு இரண்டு கால்களுக்கு பதில் நான்கு கால்கள் கூடவே ஒரு வால் இருக்கும்! அங்கே வாழ்க்கை சுலபம் என்று நினைக்கிறீர்களா? அங்கே துன்பம் இல்லையா? அங்கே அதிக துன்பங்கள் உள்ளன. இதை நீங்கள் புரிந்து கொள்ளவேண்டும். இப்படியே எப்படி தொடருவது?

## மோதல் என்பது நமது அறியாமையே

**கேள்வி கேட்பவர்** : வாழ்வில், மக்களின் குண இயல்புகள் ஒத்துப் போகாததால் மோதல்கள் உருவாகிறது, அல்லவா?

**தாதாஸ்ரீ** : மோதல்கள் உருவாவதே இந்த உலக வாழ்க்கையின் அடையாளம்!

**கேள்வி கேட்பவர்** : மோதல்களின் பின்னால் உள்ள காரணங்கள் என்ன?

**தாதாஸ்ரீ** : அறியாமை, கருத்து வேறுபாடு ஏற்பட்டு, மற்றவரிடம் பிரிவினை ஏற்பட்டால் அது உங்கள் பலவீனத்தின் அடையாளம். மக்கள் தவறானவர்கள் அல்ல. இந்த கருத்து வேறுபாட்டால் வரும் பிரிவினையில், தவறு உங்களுடையதே. மக்கள் தவறானவர்கள் அல்ல. யாரேனும் உங்களிடம் வந்து வேண்டுமென்றே மோதலில்

ஈடுபட்டால், பின் நீங்கள் அங்கே மன்னிப்பு கேட்க வேண்டும், "தம்பி, எனக்கு இது புரியவில்லை" என்று கூறி இருப்பினும், இது மக்களுடைய தவறல்ல. மக்கள், கருத்து வேறுபாட்டால் பிரிவினை உண்டாக்குபவர்கள் அல்ல. மோதல் எங்கே உருவாகிறதோ, தவறு உண்மையில் உங்களுடையதே.

**கேள்வி கேட்பவர்** : நான் மோதலை தவிர்க்க வேண்டுமென்றால், ஒரு கம்பம் நடுவில் இருந்தாலும் கூட, நான் அதை விட்டு விலகிச் செல்ல வேண்டும். ஆனால் அந்த கம்பமே என் மீது விழுந்தால் நான் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ** : அது விழுந்தால், நீங்கள் வழியிலிருந்து விலகிச் செல்லுங்கள்.

**கேள்வி கேட்பவர்** : எவ்வளவு தான் விலகிப் போக முயற்சி செய்தாலும், அந்தக் கம்பம் என் மீது விழுந்து காயம் ஏற்படுத்துகிறது. உதாரணத்திற்கு என் மனைவி (என்னுடன்) மோதலில் ஈடுபடுவது.

**தாதாஸ்ரீ** : மோதல் ஏற்படும் போது என்ன செய்ய வேண்டுமென்று கண்டறியுங்கள்

**கேள்வி கேட்பவர்** : ஒருவர் என்னை அவமானப்படுத்தும் போது, நான் அவமானமாக உணர்வது, அது எனது அஹங்காரத்தினாலா?

**தாதாஸ்ரீ** : உண்மையை சொன்னால். ஒருவர் உங்களை அவமானப்படுத்தினால், அவர் உங்கள் அஹங்காரத்தை கரைக்கிறார், அதுவும் ஒரு "நாடகப்பாணிக்குட்பட்ட" வெளியேறும்) அஹங்காரம் தான்! எவ்வளவு அதிகப்படியான அஹங்காரம் இருக்கிறதோ, அவ்வளவும் கரைந்தே தீரும். அதில் என்ன நஷ்டம் இருக்கிறது? இத்தகைய கர்மாக்கள் உங்களை சுதந்திரமாக இருக்க விடுவதில்லை. நம் முன் ஒரு குழந்தை இருந்தால் கூட,

அப்போதும் நாம் “இப்பொழுது, என்னை விடுவித்துவிடு”, என்று கூற வேண்டும்.

## ஒரு பெருங்கடலைப் போல, எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொள்ளுங்கள்

**கேள்வி கேட்பவர்** : தாதா, கருத்து வேறுபாட்டினால் உண்டாகும் மோதல்களில், பொதுவாக வயதில் மூத்தவர்கள் இளையவரிடம் குற்றம் கண்டுபிடிக்கிறார்கள், இளையவர் தங்களைவிட இளையவரிடம் குற்றம் கண்டு பிடிக்கிறார்கள்; ஏன் இப்படி நடக்கிறது?

**தாதாஸ்ரீ** : இது, மூத்தவர்கள் இளையவரை ‘அவசரமாக விழுங்கி’ விடுவது போன்றதாகும். அதன் அர்த்தம் என்னவென்றால், வயதில் மூத்தவர்கள் இளையவரிடம் குற்றம் கண்டுபிடிப்பதாகும். அதற்குப் பதிலாக “இது உண்மையில் என்னுடைய தவறு”, என்று கூற வேண்டும். குற்றத்தின் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொண்டால், எல்லாம் சரியாகிவிடும். மற்றவருக்கு பொறுத்துப் போகும் சக்தி இல்லையென்றால், ‘நாம்’ என்ன செய்ய முடியும்? ‘நாம் நம்மீதே’ பழியை ஏற்றுக்கொள்ள வேண்டியது தான்; ‘நாம்’ அடுத்தவரை பழி கூற முடியாது. நாம் ஏன் அடுத்தவரை பழி கூற வேண்டும்? ‘நமக்கு’ பெருங்கடலைப் போல பெரிய வயிறு இருக்கிறதே! பாருங்கள் மும்பையிலுள்ள எல்லா கழிவு நீரையும், பெருங்கடல் தனக்குள் வாங்கிக் கொள்வதில்லையா? அதைப் போலவே நாமும் எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொள்ள வேண்டும். இதன் விளைவு மற்றவரிடமும், குழந்தைகளிடமும் ஒரு ஆழ்ந்த மாறுதலை உண்டு செய்யும். அவர்களும் அதிலிருந்து கற்றுக் கொள்வார்கள். குழந்தைகள் கூட அதை கவனிப்பார்கள். ‘அவரது வயிறு ஒரு பெருங்கடலைப் போல பெரியது!’ என்று. எவ்வளவு உங்களை நோக்கி வந்தாலும், அதை சேமித்து வைத்துக் கொள்ளுங்கள். உலக வாழ்க்கையின் நியதி என்னவென்றால் ஒருவர் உங்களை அவமானப்படுத்தும்

போது அவரது சக்தியை உங்களிடம் கொடுத்துவிட்டு விடை பெறுகிறார். அதனால் அவமானத்தை சிரித்த முகத்துடன் ஏற்றுக் கொள்ளுங்கள்!

## வ்யவஸ்தித்தின் தவறான பயன்பாடு

**கேள்வி கேட்பவர்** : மோதல்களைத் தவிர்க்கும் எண்ணம் மற்றும் நான் எல்லா ஃபைல்களையும் சமநிலையில் தீர்வு காண விரும்பும் போது; ஒரு நபர் என்னை துன்பப்படுத்தி அவமானப்படுத்தினால்; அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ** : எதுவும் செய்யக் கூடாது. அது உங்களின் கர்மக் கணக்கு காணவேண்டும் என்று மனதில் உறுதி செய்து கொள்ளவேண்டும். நீங்கள், (இந்த ஃபைல்களை) சமநிலையில் தீர்வு காணவேண்டும். உங்கள் சட்டங்களுக்கு எப்போதும் உட்பட்டு, புதிர்களுக்கான தீர்வுகளை நீங்களே காணவேண்டும்.

**கேள்வி கேட்பவர்** : இந்த மோதல்கள் உருவாவது வ்யவஸ்தித் (அறிவியல் சூழ்நிலை ஆதாரங்களின் காரணத்தால் தான்), அல்லவா?

**தாதாஸ்ரீ** : ஆம், மோதல்கள் வ்யவஸ்திற்குட்பட்டது என்று எப்போது கூற முடியும்? மோதல் நிகழ்ந்த பிறகு கூறவேண்டும். உங்களின் உறுதியான முடிவு "நான் எந்த மோதலிலும் ஈடுபடமாட்டேன்" என்பது. ஒரு கம்பம் உங்கள் பாதையில் இருந்தால், 'நான் விலகிச் செல்ல வேண்டும், கண்டிப்பாக அதை நோக்கி ஓடக்கூடாது' என்பதாகும். இருப்பினும், மோதல் நிகழ்ந்தால், நீங்கள் "இது அறிவியல் சூழ்நிலை ஆதாரத்தின் விளைவினால்" என்று கூறலாம். நீங்கள் ஆரம்பத்திலேயே "இது அறிவியல் சூழ்நிலை ஆதாரத்தின் விளைவினால்" என்று நம்பிக் கொண்டு இருந்தால், அது வ்யவஸ்தித் சக்தியை தவறாக பயன்படுத்துவது என்றாகும்.

## சர்ச்சைகளால் ஆற்றல் அழிந்துவிடுகிறது

ஆத்மாவின் எல்லா ஆற்றல்களும் அழிந்துபோவது, சர்ச்சைகளால் தான். சர்ச்சைகளால் சிறிதளவு மோதினால் கூட, அவனுக்கு எல்லாம் முடிந்துவிடும்! வேறொருவர் மோதினாலும் நீங்கள் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும். மோதல் ஏற்படவே கூடாது. இந்த உடம்பு அழிய வேண்டும் என்று இருந்தால், அது அழிந்து போகும். (எத்தகைய கடினமான சூழ்நிலையாக இருந்தாலும்); ஆனால் நீங்கள் மோதலில் ஈடுபடக்கூடாது. மோதல் இல்லாமல் இருந்தால் தான், ஒருவரால் மோட்சம் அடைய முடியும். ஒருவர் "நான் மோதலில் ஈடுபடவே கூடாது" என்று அறிந்து கொண்டால் அவருக்கு குரு என்பவரோ அல்லது வேறொருவரோ இடையில் தேவையில்லை. அவர் ஒன்றிரண்டு பிறவிகளிலேயே, அவர் நேரடியாக மோட்சம் அடைந்து விடுவார். 'நான் யாருடனும் மோதலில் ஈடுபடக் கூடாது' என்ற முடிவு செய்து, அதே புரிதலுடன் அவர் செயல்பட்டால், "சம்கித்" (நான் சுத்தாத்மா என்ற சரியான புரிதல்) அந்தக் கணமே ஏற்பட்டுவிடும்! அதனால் யாருக்காவது 'நான் சுத்தாத்மா' என்ற சரியான புரிதலை அடைய வேண்டுமென்றால், "யாருடனும் மோதலில் ஈடுபட மாட்டேன் என்று முடிவு செய்யுங்கள். சரியான புரிதல் அந்த கணத்திலிருந்தே ஏற்பட்டுவிடும் அதற்கு நான் உத்திரவாதம் அளிக்கிறேன்" ஒருவருக்கு உடலை பாதிக்கும் மோதலில் ஈடுபட்டு, காயமடைந்தால் அதற்கு சிகிச்சை அளித்து அந்த காயத்தை ஆற்றிவிடலாம். ஆனால் சர்ச்சையாலும், மோதலாலும், மனதிலோ, புத்தியிலோ உள்ள கறைகளை யார் அகற்றுவது? ஆயிரம் பிறவிகள் எடுத்தாலும் அது விட்டுச் செல்லுவதில்லை.

**கேள்வி கேட்பவர் :** மனதிலும் புத்தியிலும் ஏற்பட்ட காயங்கள், மோதலாலும், சர்ச்சையாலும் உண்டானதா?

**தாதாஶ்ரீ :** மனதிலும், புத்தியிலும் மட்டுமல்ல, மொத்த அந்தக்கரணத்திலும் (மனம் - புத்தி - சித்தம் -

அஹங்காரம் உள்ளடங்கியது) காயம் ஏற்பட்டு விடும், அதன் விளைவு உடலளவிலும் ஏற்படும். அதனால், மோதல்களால் நிறைய துன்பங்கள் ஏற்படுகின்றன!

**கேள்வி கேட்பவர்** : மோதல்களினால் எல்லா ஆற்றல்களும் அழிந்துவிடுகிறது, என்று நீங்கள் சொல்கிறீர்கள். பின்னர் அந்த ஆற்றலை விழிப்புணர்வால் திரும்பப் பெற முடியுமா?

**தாதாஸ்ரீ** : ஆற்றலைத் திரும்பப் பெற தேவையில்லை. ஆற்றல் உண்மையில் அங்கேயே தான் உள்ளது. இப்போது அந்த ஆற்றல் அதிகரிக்கிறது. கடந்த காலத்தில் ஏற்பட்ட மோதல் மற்றும் அதற்கு உண்டான நஷ்டம்; அது (ஆற்றல்) இப்போது திரும்பி அதிகரிக்கிறது. ஆனால் புதிதாக நீங்கள் சர்ச்சை உருவாக்கினால், அந்த ஆற்றல் நீங்கிவிடும். அதிகரித்த ஆற்றலும் நீங்கிவிடும், மற்றும் நீங்கள் சர்ச்சைகள் ஏற்பட அனுமதிக்கவில்லை என்றால், ஆற்றல் அதிகரித்துக் கொண்டே இருக்கும்!

இந்த உலகில், பகைமையால் மோதல் உண்டாகிறது. இந்த உலக வாழ்க்கையின் மூலக்காரணமே பகைமை தான். பகைமை மற்றும், மோதல்களை அனுமதிக்காத ஒருவரே மோட்சமடைந்திருக்கிறார்! அன்பு ஒரு தடையல்ல; பகைமை விலகினால், அன்பு உதயமாகும்.

## இயல்பறிவு, ‘அனைத்து இடங்களிலும் பொருந்தும்’

உலகத் தொடர்புகளை தூய்மையாக்க தேவையானது என்ன? முழுமையான இயல்பறிவு தேவை. அது உறுதியாகவும், தீவிரமானதாகவும் இருக்க வேண்டும். இயல்பறிவு என்பது ‘அனைத்து இடங்களுக்கும் பொருந்தும்’. ஒருவருக்கு இயல்பறிவுடன், ஆத்ம ஞானமும் இருந்தால், அவர் பிரகாசமானவராக இருப்பார்.

**கேள்வி கேட்பவர்** : இயல்பறிவு எப்படி உதிக்கும்?

**தாதாஶ்ரீ** : ஒருவர் உங்களுடன் மோதலில் ஈடுபடும்போது, நீங்கள் அவருடன் மோதாமல் இருந்தால், இயல்பறிவு உதிக்கும். எனினும், நீங்கள் யாருடனும் மோதக் கூடாது; இல்லையேல், உங்கள் இயல்பறிவை இழந்து விடுவீர்கள். உங்களிடத்தில் இருந்து எந்த சர்ச்சையும் இருக்கக் கூடாது. மற்றவருடைய சர்சையால், உங்களுக்கு இயல்பறிவு உதிக்கிறது. ஆத்மாவின் சக்தியானது சர்ச்சைகளின் போது எப்படி நடந்து கொள்ள வேண்டும், என்ற தீர்வை வழங்கிக் கொண்டிருக்கும். அப்படி வழங்க ஆரம்பித்து விட்டால், அந்த அறிவு உங்களை விட்டு விலகாது. இப்படித்தான் இயல்பறிவு பெருகும். நான் பொதுவாக சர்ச்சையை அனுபவிப்பதில்லை. எனக்கு அளவற்ற இயல்பறிவு உள்ளதால், நீங்கள் என்ன கூற வேண்டுகிறீர்கள் என்பதை உடனடியாக நான் புரிந்து கொள்வேன். மக்கள் நினைத்துக் கொள்வார்கள், 'அவர் தாதாவிற்கு தீங்கு செய்கிறார்' என்று, ஆனால் நான் உடனே அறிந்து கொள்வேன் 'இந்த தீங்கு உண்மையில் தீங்கல்ல' என்று. உலகத்தின் கண்ணோட்டத்திலும் அது தீங்கல்ல, மதங்களின் கண்ணோட்டத்திலும் அது தீங்கல்ல, ஆத்மாவிற்குட்பட்ட தொடர்பிலும் அது தீங்கு அல்ல. மக்கள் நினைத்து கொள்வார்கள் இந்த மனிதர் செய்வது, ஆத்மாவிற்கு தீங்கு விளைவிக்க கூடியது என்று, ஆனால் நான் அதன் பயன்களைப் புரிந்து கொண்டு உள்ளேன். இதுவே இயல்பறிவின் சக்தி ஆகும். அதனால் தான், நான் இயல்பறிவின் வரையறை 'எல்லா இடங்களிலும் பொருந்தும்' என்று கூறியுள்ளேன். இன்றைய இளம் தலைமுறையிடம் இயல்பறிவு என்பதே இல்லை. அது ஒவ்வொரு தலைமுறையிலும் படிப்படியாக குறைந்து கொண்டே வருகிறது.

இந்த (ஆத்மா) விஞ்ஞானத்தை பெற்ற பிறகே, ஒருவரால் இப்படி வாழ முடியும். இல்லையேல் மொத்த மக்கள் தொகையில், அரிதாக ஒருவர் மட்டுமே இப்படி வாழ முடியும்; அப்படி ஆசிர்வதிக்கப்பட்ட மனிதர்கள்

இருக்கிறார்கள்! எனினும், சில இடங்களில் அவர்கள் இப்படி இருக்கலாம், எல்லா சூழ்நிலையிலும் அவ்வாறு இருக்க முடியாது.

**கேள்வி கேட்பவர் :** ஒரு (வளர்ச்சியான) அடுக்கிற்கும் மற்றொரு அடுக்கிற்க்குமிடையே மிகப்பெரிய வித்தியாசம் இருப்பதே எல்லா சர்ச்சைகளுக்கும் காரணமா?

**தாதாஸ்ரீ :** சர்ச்சைகள் முன்னேற்றத்திற்குரியதே. எவ்வளவு சர்ச்சைகள் ஏற்படுகிறதோ, மோதல் ஏற்படுகிறதோ அந்தளவு முன்னேற்றத்திற்க்கான வாய்ப்புள்ளது. சர்ச்சைகள் உருவாகவில்லை என்றால், நீங்கள் எங்கிருக்கிறீர்களோ அங்கேயே தங்கி விடுவீர்கள். அதனால் தான் மக்கள் சர்ச்சைகளைத் தேடிச் செல்கின்றனர்.

## சர்ச்சைகளால் முன்னேற்றப் பாதை

**கேள்வி கேட்பவர் :** ஒருவர் சர்ச்சைகள் முன்னேற்றத்திற்குரியதே என்ற புரிதலோடு சர்ச்சையைத் தேடினால், பிறகு அவர் முன்னேற்றம் அடைவார்.

**தாதாஸ்ரீ :** எனினும் இப்படி ஒரு புரிதலை கொண்டு, யாரும் சர்ச்சையை அணுகுவதில்லை! கடவுள் உங்களை உயரச் செய்வதில்லை, சர்ச்சைகளே உங்களை உயரச் செய்கிறது. சர்ச்சைகள் ஒரு குறிப்பிட்ட வரம்பு வரை உங்களை உயர்த்தும். அதன் பிறகு ஞானியை சந்திப்பதே பயனுள்ளதாக இருக்கும். சர்ச்சைகள் இயற்கையாகவே நிகழுவது. ஆற்றின் நீரோட்டத்தில் ஒரு சொரசொரப்பான கல் இங்கும் அங்கும் உரசி வழுவழுப்பாக உருண்டையாவது போல.

**கேள்வி கேட்பவர் :** கர்ஷன் மற்றும் சங்கர்ஷன் என்பதின் வித்தியாசம் என்ன?

**தாதாஸ்ரீ** : உயிரற்ற பொருள்கள் மோதிக் கொள்வது, கர்ஷன் எனப்படும், மற்றும் உயிருள்ளவைகள் மோதி கொள்வது, சங்கர்ஷன் எனப்படும்.

**கேள்வி கேட்பவர்** : உயிருள்ளவைகளுடன் மோதுவதினால் ஆத்மா சக்தியை தடைசெய்யும், அல்லவா?

**தாதாஸ்ரீ** : ஆம். அது சரிதான். உயிருள்ளவைகளுடன் மோதல் ஏற்படுவது பிரச்சனையல்ல, நான் சொல்வது என்னவென்றால், 'நான் மோதலில் ஈடுபட வேண்டும்' என்ற உள்நோக்கத்திலிருந்து விடுபட வேண்டும். 'உங்களுக்கு' (விழிப்படைந்த ஆத்மா) மற்ற எந்த உயிரினத்துடனும் மோதக்கூடாது என்ற உள்நோக்கம் இருக்க வேண்டும், அதன் பிறகு சந்தூபாய் (தற்சார்பு சொரூபம்) மற்ற உயிரினத்துடன் மோதினால், விட்டு விடுங்கள். 'உங்கள்' உள்நோக்கம் (யாருடனும் மோதக் கூடாது) என்பது தடைப் படக் கூடாது.

## தற்சார்பு சொரூபமே சர்ச்சைகளை உருவாக்குகிறது.

**கேள்வி கேட்பவர்** : யார் சர்ச்சையை உருவாக்குகிறார்கள், உயிரற்ற (ஜட) பொருளா இல்லை உயிருள்ள (சேதன்) வஸ்துவா?

**தாதாஸ்ரீ** : கடந்த காலத்தின் சர்ச்சைகளே இப்போது சர்ச்சைகளை உண்டாக்குகிறது. இதில் ஆத்மாவா அல்லது அனாத்மாவா என்ற கேள்விக்கே இடமில்லை. ஆத்மா இவை எதிலும் குறுக்கிடுவதில்லை. அனாத்மாவின் பாகம் (புத்கல்) தான் உண்மையில் இந்த சர்ச்சைகளை உருவாக்குகிறது. எனினும், கடந்த காலத்தில் நிகழ்ந்த சர்ச்சைகளே மறுபடியும் சர்ச்சைகளை உருவாக்குகிறது. யார் ஒருவருக்கு கடந்த காலத்தின் சர்ச்சை தீர்ந்து விட்டதோ, அவருக்கு புதிய சர்ச்சை மறுபடியும் உருவாகாது. இல்லையேல், ஒரு சர்ச்சை மற்றொரு சர்ச்சையை உண்டாக்குகிறது, மேலும் பல சர்ச்சைகளை

வழி வகுக்கிறது; இப்படியே தொடர்ந்து அதிகரித்துக் கொண்டு இருக்கிறது.

அனாத்மாவின் பாகம் முற்றிலும் உயிரற்ற ஜடப்பொருள் அல்ல, அது மிஷ்ரசேத்தன் (ஆத்மா மற்றும் அனாத்மாவின் கலவையினால் எழும் தவறான புரிதலை கொண்ட 'நான்') இதை விபாவிக் புத்கல் எனக் குறிப்பிடப்படுகிறது. விபாவிக் என்றால், இயல் சுபாவத்திற்கு மாறான உள்நோக்கத்தினால் எழுந்த அனாத்மா பாகம். இதன் காரணமாக தான் அனைத்தும் நிகழ்கிறது. தூய்மையான ஜடப்பொருள் (புத்கல்) இதை நிகழச் செய்ய முடியாது. இந்த புத்கல் தான் மிஷ்ரசேத்தன் ஆகிவிட்டது. அதாவது ஆத்மாவின் இயல் சுபாவத்திற்கு மாறான உள்நோக்கம் மற்றும் அனாத்மாவின் இயல் சுபாவத்திற்கு மாறான உள்நோக்கம், ஒன்றாக இணைந்து மூன்றாவதான ஒரு நிலையை உருவாக்கி விட்டது. அது தான் பிரக்ருதி (அஞ்ஞானத்தால் 'நான் சந்தூபாய்' என்ற தவறான புரிதலை தொடர்ந்து நிறுவப்பட்டதின் பலனாக உருவாகிய வெளிப்படையாக காணக்கூடிய நிலை); வடிவத்தை பெற்றுள்ளது. இதுவே எல்லா சர்ச்சைகளுக்கும் காரணம்.

**கேள்வி கேட்பவர் :** எங்கே சர்ச்சை இல்லையோ, அங்கே அஹிம்சையின் ஆழ்ந்த உள்நோக்கம் உருவாகி இருக்கிறதா?

**தாதாஸ்ரீ :** இல்லை, அப்படி எதுவும் இல்லை. ஆனால் இப்போது நீங்கள் புரிந்து கொண்டீர்கள், "சுவருடன் மோதியதில் இத்தனை நன்மை இருந்தால், கடவுளுடன் மோதும் போது எவ்வளவு நன்மை?", என்று. இதனால் ஏற்படும் தீங்குகளை அறிந்த பிறகே, உங்களுக்குள் மாற்றம் தொடர்ந்து ஏற்படும்.

அஹிம்சையை (மனம், வாக்கு, செயலிலும் கடைபிடிக்கும் அஹிம்சை) முழுவதுமாக புரிந்து கொள்ள

முடியாது. மேலும் அதை முற்றிலுமாக விவரிப்பது கடினம். அதனால் 'நான் யாருடனும் மோதலில் ஈடுபடக்கூடாது' என்பதை மட்டும் புரிந்து நடந்து கொண்டால், உங்கள் ஆற்றல்கள் சேமிக்கப்பட்டு, நாளுக்கு நாள் அதிகரித்து கொண்டே இருக்கும். அதன் பிறகு, மோதலால் உண்டாகும் நஷ்டம் ஏற்படாது! அவ்வப்போது மோதல்கள் நிகழ்ந்தால், அதை ப்ரதிக்ரமன் (ஒருவர் தனது தவறுகளை நினைகூர்ந்து அதை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டு, வருந்தி மன்னிப்பு கோரி, மீண்டும் செய்யாமல் இருக்க உறுதிமொழி எடுக்கும் செயல்முறை) செய்து அழித்து விடலாம். ஆகையால் எப்போது சர்ச்சைகள் ஏற்படுகிறது என்பதை கண்டறிந்து அப்போது ப்ரதிக்ரமன் செய்ய வேண்டும், இல்லையேல் கடுமையான விளைவுகள் ஏற்படும். இந்த ஆத்ம ஞானத்தின் மூலம், நீங்கள் மோட்சம் அடைந்து விடுவீர்கள், எனினும் சர்ச்சைகளில் ஈடுபட்டால், நீங்கள் பல தடைகளை எதிர்கொள்வீர்கள், மேலும் மோட்சம் தாமதமாகும்.

இந்த சுவருக்கு, எதிர்மறை எண்ணங்கள் எழுந்தால் பிரச்சனை இல்லை, ஏனென்றால் இதில் நஷ்டம் ஒரு தலை பட்சமானதே. ஆனால் ஒரு சிறிய எதிர்மறை எண்ணம் ஒரு உயிரினத்திற்கு ஏற்பட்டுவிட்டால், அது தீங்கை விளைவிக்கும். நஷ்டம் இருதரப்புக்கும் ஏற்படும். எனினும், நீங்கள் அதற்காக ப்ரதிக்ரமன் செய்தால் எல்லா தவறுகளும் அழிந்து விடும். அதனால் சர்ச்சைகள் ஏற்படும் போதெல்லாம் ப்ரதிக்ரமன் செய்யுங்கள், சர்ச்சைகள் முடிவுக்கு வந்துவிடும்.

## தீர்மானம், சரியான புரிதலால் மட்டும்

**கேள்வி கேட்பவர்** : தாதா, அஹங்காரத்தைப் பற்றிய விவாதமானது வீட்டுச் சூழலுக்கு தொடர்புடையது மட்டுமல்லாது, நமது நிறுவனத்திற்கும், தாதாவின் வேலைகளை செய்யும் போதும், எங்கே அகங்காரம்

மோதலில் ஈடுபடுகிறதோ அங்கேயும் இது பொருந்துகிறது. ஒரு தீர்மானம் அங்கேயும் தேவையுள்ளது, அல்லவா?

**தாதாஸ்ரீ :** ஆம், ஒரு தீர்மானம் கண்டிப்பாகத் தேவை! இங்கே ஆத்ம ஞானம் பெற்றிருப்பவர்கள் தீர்வை கண்டு கொள்வார், ஆனால் ஆத்ம ஞானம் இல்லாதவர்களுக்கு, என்ன தீர்வு இருக்கிறது? அதனால் அந்த நபர் வழிதவறிப் போய், மனதளவில் பாதிக்கப்படுவார். நாம் இங்கே அப்படி வழி தவறுவதில்லை.

**கேள்வி கேட்பவர் :** ஆனால் தாதா, ஒருவர் மோதலில் ஈடுபடக் கூடாது அல்லவா?

**தாதாஸ்ரீ :** மோதலில் ஈடுபடுவது அவர்களின் குண இயல்பு. இது ஏன் நடக்கிறதென்றால், மக்கள் அத்தகைய கர்மக் கணக்குகளை கொண்டு வந்துள்ளனர். அது போன்ற கணக்குகளை கொண்டு வராதவர்களுக்கு இப்படி நடப்பதில்லை. அதனால், நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் இது அந்த நபரின் பழக்கம் என்று. நீங்கள் இதை புரிந்து கொள்ள வேண்டும். பிறகு, அது உங்களை பாதிக்காது. இது ஏனென்றால், இந்த பழக்கங்கள் உடையவரை சார்ந்திருக்கும் (நீங்கள் ஆத்மா சொரூபம்!) பிறகு அதற்கு தீர்வு ஏற்பட்டுவிடும். நீங்கள் அதில் சிக்கிக் கொண்டால், பிறகு அது ஒரு பிரச்சனை தான். எப்படியிருந்தாலும் மோதல்கள் கண்டிப்பாக எழும். மோதல்கள் எழாமல் இருக்க முடியாது! ஒரே ஒரு விஷயத்தை மட்டும் உறுதிபடுத்திக் கொள்ள வேண்டியது என்னவென்றால், இறுதியில் சர்ச்சையால் உங்களுக்கும் எதிரே உள்ள நபருக்கும் மனதளவில் இடைவெளி ஏற்பட்டுவிடக் கூடாது. கணவன் மனைவிக்கும் இடையே கூட சர்ச்சைகள் ஏற்படும். இருப்பினும், அவர்கள் ஒன்றாக இருக்கிறார்கள், அல்லவா? இப்படி நடப்பது சகஜம். . 'மக்களே நீங்கள் யாருடனும் மோதக் கூடாது' என்று 'நாங்கள்' யார் மீதும் மன அழுத்தத்தில் ஆழ்த்துவதில்லை.

**கேள்வி கேட்பவர்** : ஆனால் தாதா, மோதல்களை தவிர்க்க வேண்டும் என்ற நிலையான உள்நோக்கம் இருக்க வேண்டும், அல்லவா?

**தாதாஸ்ரீ** : ஆம், அதை தக்க வைத்துக் கொள்ளவேண்டும். உண்மையில் அதை தான் பின்பற்ற வேண்டும்! ப்ரதிக்ரமன் செய்ய வேண்டும் மற்றும் அந்த நபரிடம் தோழமையான அணுகுமுறையுடன் பழக வேண்டும். திரும்பவும் கருத்து மோதல் ஏற்பட்டால் மீண்டும் ப்ரதிக்ரமன் செய்யுங்கள். ஏனென்றால் ஒரு அடுக்கு விலகினால் அடுத்த அடுக்கும் விலகிவிடும். அவை அடுக்குகளாக உள்ளது, அல்லவா? என்னுடைய விஷயத்தில், எப்போதெல்லாம் மோதல் உருவாகிறதோ, அப்பொழுதெல்லாம் இன்று ஒரு நல்ல அனுபவம் கிடைத்தது என்று மனதில் கணக்கு வைத்துக் கொள்வேன்! மோதல்கள் உங்களை சறுக்கி விழுவதில் இருந்து தடுத்துவிடுகிறது; உங்களை எப்பொழுதும் விழிப்புடன் இருக்கச் செய்கிறது! அது உங்கள் ஆத்மாவிற்கு ஒரு ஊட்டச்சத்து ஆகும். அதனால் மோதுவதில் எந்த பிரச்சனையும் இல்லை. ஆனால் மோதுபவருடன் மனதளவில் ஒரு இடைவெளியை உருவாக்கிக் கொள்ளக் கூடாது என்று கருத்தில் கொள்ள வேண்டும். அப்படி அந்த நபருடன் மன இடைவெளி உண்டானால், ப்ரதிக்ரமன் செய்து நிலைமையை சரி செய்யுங்கள். நான் எப்படி இந்த மக்கள் அனைவரிடமும் ஒத்து போகிறேன்? நான் உங்களுடனும் ஒத்து போகிறேன், அல்லவா? உண்மை என்னவென்றால் வார்த்தைகளினால் தான் மோதல்கள் உண்டாகிறது. நான் நிறைய இடங்களில் பேச வேண்டி இருக்கிறது, இருப்பினும் எனக்கு மோதல்கள் உண்டாவதில்லை, அல்லவா!

மோதல்கள் ஏற்படும். அடுப்படியில் பாத்திரங்கள் மோதிக் கொள்ளும் போது சப்தம் உண்டாக்குவதில்லையா? மோதுவது என்பது அனாத்மாவின் உள்ளார்ந்த குண இயல்பு ஆகும், ஆனால் அத்தகைய கணக்குகளுடன் அவை வந்திருக்க வேண்டும்,

இல்லை என்றால் அப்படி மோதல் ஏற்படாது. எனக்கும் மோதல்கள் உண்டாகும். எனினும், ஆத்ம ஞானம் அடைந்த பிறகு மோதல்கள் எழவில்லை, ஏன் என்றால் இந்த ஆத்ம ஞானமானது அனுபவ ஞானம் ஆகும். நான் இந்த ஞானத்தை உபயோகித்து தான் என்னுடைய கணக்குகள் அனைத்தையும் தீர்த்துவிட்டேன். ஆனால் உங்களுக்கு தீர்க்கப்படவேண்டியது இன்னும் உள்ளது.

## தவறுகள் ப்ரதிக்ரமன் மூலம் களையப்படுகிறது

நீங்கள் ஒருவருடன் மோதும் போது, உங்கள் தவறுகளை எண்ணிப் பார்ப்பீர்கள் ஆனால் மோதல் ஏற்படாத போது உங்களின் தவறுகள் வெளிப்படாமல் மறைந்திருக்கும். நீங்கள் தினமும் ஐந்நூறுக்கும் மேற்பட்ட தவறுகளை உங்களிடத்தில் கண்டுபிடித்தீர்கள் என்றால், முழுமை நிலையை நெருங்கி விட்டீர்கள் என்று புரிந்து கொள்ளுங்கள்.

ஆதலால், நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும், மோதல்களை தவிருங்கள். மோதல்களை உருவாக்குவதினால் நீங்கள் இந்த வாழ்க்கையை மட்டுமல்ல, அடுத்த பிறவியையும் சேர்த்துக் கெடுத்துக் கொள்கிறீர்கள்! இந்த வாழ்க்கையை கெடுத்துக் கொள்ளும் ஒருவர் தவறாமல், அடுத்த பிறவியையும் பாழாக்கிக் கொள்கிறார். இப்போதைய வாழ்க்கை மேம்பட்டால், அடுத்த பிறவியும் மேம்படும். இந்த வாழ்க்கையில் பிரச்சனைகளை எதிர்கொள்ளவில்லை என்றால், அடுத்த பிறவியும் பிரச்சனை இல்லாமல் இருக்கும் என்பதை புரிந்து கொள்ளுங்கள். இங்கே இப்போது பிரச்சனைகளை நீங்கள் உருவாக்கினால், அது கண்டிப்பாக அடுத்த பிறவியிலும் தொடரும்.

## மேலும் மூன்று பிறவிகளுக்கான உத்திரவாதம்

மோதலில் ஈடுபடாமல் இருப்பவர்கள், மூன்று பிறவிகளில் மோட்சம் அடைவார்கள் என்கிற உத்திரவாதத்தை நான் கொடுக்கிறேன். மோதலில் ஈடுபட்டால் ப்ரதிக்ரமன் செய்யுங்கள். மோதல் அனாத்மா பாகத்துக்குட்பட்டது. இரு அனாத்மா பாகத்திற்கும் இடையேயான மோதலை ப்ரதிக்ரமன் மூலம் அழித்து விடலாம்.

எதிரே உள்ள நபர் அதைப் பெருக்கினால், நீங்கள் அதை வகுக்க வேண்டும், இப்படி செய்வதினால் மீதம் பூஜ்யம் என்று இருக்கும். ‘அவர் என்னிடம் அப்படி பேசினார், இப்படிப் பேசினார்’ என்று நினைப்பது கூட தவறாகும். நீங்கள் சாலையில் நடக்கும் போது, சுவருடன் மோதிக் கொண்டால், அதனுடன் ஏன் சண்டை போடுவ தில்லை? ஏன் மரங்கள் ஜடப் பொருளாக கருதப்படுகிறது? உண்மையில் உங்களை காயப்படுத்துபவர்கள் எல்லாம் வாழும் மரங்களே! ஒரு பசு உங்கள் கால்களை மிதித்து விட்டால் நீங்கள் ஏதாவது கூறுவீர்களா? அதை போன்று தான் இந்த மக்களிடமும் நீங்கள் இருக்க வேண்டும். ஒரு ஞான புருஷ் ஏன் எல்லோரையும் மன்னித்து விடுகிறார்? இந்த துரதிருஷ்டவசமான மக்களுக்கு புரியாது என்பது அவருக்குத் தெரியும். அவர்கள் மரங்களை போன்றவர்கள். ஆனால் புரிதல் உள்ளவர்களுக்கு எதுவும் சொல்லத் தேவையில்லை; அவர்கள் உள்ளார்ந்து உடனடியாகப் ப்ரதிக்ரமன் செய்துவிடுவார்கள்.

## எங்கெல்லாம் ஈர்ப்பு இருக்கிறதோ, அங்கே நிச்சயமாக எதிர்வினை இருக்கும்.

**கேள்வி கேட்பவர் :** பல நேரங்களில், எந்த வெறுப்பும் இருக்க கூடாது என்ற விருப்பம் இருக்கிறது, இருப்பினும் அது எழுகிறது. இதன் பின்னால் உள்ள காரணம் என்ன?

**தாதாஸ்ரீ** : யாரிடம் அப்படி நடக்கிறது?

**கேள்வி கேட்பவர்** : சிலசமயங்களில் என் கணவரிடம் அது நிகழ்ந்தால்?

**தாதாஸ்ரீ** : அதற்கு அர்த்தம் வெறுப்பு அல்ல. ஈர்ப்பினால் உருவான அன்பிற்கு எப்போதும் எதிர்வினை இருக்கும். அதனால் ஒருவர் எரிச்சலடையும் போது, மற்றவர் நிராகரிக்கப்படுகிறார். நிராகரிக்கப்பட்ட பின், சிறிது நேரத்திற்கு இடைவெளியை கடைபிடிக்கிறார். பிறகு மீண்டும் அன்பு உதயமாகிறது. அப்புறம் மீண்டும் இந்த அன்பு கடுமையான வலி ஏற்படுத்தும் போது, மோதல் ஏற்படுகிறது. அதன் பிறகு மீண்டும் அன்பு அதிகரிக்கிறது. எங்கு அதீத அன்பு இருக்கிறதோ, அங்கு குறுக்கீடு ஏற்படுகிறது. எங்கெல்லாம் உள்ளார்ந்த ஆழமான குறுக்கீடு ஏற்படுகிறதோ, அவர்கள் ஒருவரை ஒருவர் அதிகம் விரும்புகிறார்கள். அன்பு உள்ள இடத்திலே தான் குறுக்கீடும் இருக்கும். முந்தைய பிறவியிலிருந்து அன்பு தொடர்ந்திருந்தால், அங்கே குறுக்கீடு இருக்கும். அங்கே அளவிற்கதிகமான அன்பு இருக்கிறது. இல்லையேல், குறுக்கீடே இருக்காது, அல்லவா? இதுவே குறுக்கீட்டின் குண இயல்பாகும்.

மக்கள் என்ன சொல்கிறார்கள்? “சண்டைகள் எங்களுக்குள் அன்பை அதிகப்படுத்துகிறது”, என்று. ஆனால் அது உண்மை தான். மோதல்களினால் அந்த ஈர்ப்பு உருவாகியுள்ளது. எங்கே மோதல்கள் குறைவாக உள்ளதோ, அங்கே ஈர்ப்பு தோன்றுவதில்லை. எந்த வீட்டில் அளவான மோதல்கள் உள்ளதோ, அங்கே ஈர்ப்பும் அளவோடு தான் இருக்கும் என்பதை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்கு இது புரிகிறதா?

**கேள்வி கேட்பவர்** : நம்முடைய தினசரி வாழ்க்கையில், சில நேரங்களில் அஹங்காரத்தினால் நிறைய தீப்பொறிகள் பறக்கும்.

**தாதாஸ்ரீ** : அந்த தீப்பொறிகள் அஹங்காரத்தால் தோன்றுவது அல்ல. அது அஹங்காரத்தின் தீப்பொறி போலத் தோன்றலாம், ஆனால் அது பாலியல் உணர்வுகளால் தோன்றுவது. பாலியல் தொடர்புகள் இல்லையென்றால் மோதல்கள் உருவாகாது. உண்மையில் பாலியல் உறவுகள் முடியும் போது, மொத்த சரித்திரமும் முடிவுக்கு வந்துவிடும். ஆகையால் ஒரு தம்பதியர் ஒரு வருடம் பிரம்மச்சரியம் கடைபிடிக்க சபதம் எடுத்து பின்பற்றிய பின், நான் அவர்களிடம் கேள்வி கேட்கும் போது அவர்களது பதில் இதுதான் “இல்லை, ஒரு சிறிய பிரச்சனை கூட இல்லை, சச்சரவு இல்லை, மோசடி இல்லை, எதுவும் இல்லை, அனைத்தும் நின்றுவிட்டது!” நான் அதற்காகவே கேட்பதுண்டு. எனக்குத் தெரியும் இது இப்படித்தான் மாறும் என்று. அதனால் மோதல்கள் பாலியல் தொடர்புகளினால் ஏற்படுகின்றன.

**கேள்வி கேட்பவர்** : முன்பெல்லாம், நாம் நினைப்பதுண்டு, இந்த சண்டைகள் எல்லாம் வீட்டு வேலைகளைச் சார்ந்து உள்ளது என்று. வீட்டு வேலைகளில் உதவி செய்தாலும் சர்ச்சைகள் தொடரும்.

**தாதாஸ்ரீ** : எல்லா சர்ச்சைகளும் தோன்றும். பாலியல் உறவுகள் உள்ள வரை, மோதல்கள் தோன்றும். உண்மையில் இது மோதல்களின் மூலக்காரணம் ஆகும். காமத்தை வென்றவரை யாராலும் வெல்ல இயலாது, அப்படிப்பட்டவரிடம் யாரும் சவால் கூட விடமுடியாது. அத்தகைய மனிதரின் ஒளியானது மிகவும் ஆற்றல் வாய்ந்ததாக இருக்கும்.

## மோதல்கள், வெளிப்படையானதிலிருந்து அதிநுட்பமானது வரை

**கேள்வி கேட்பவர்** : உங்களுடைய வாக்கியமானது, “மோதல்களைத் தவிர்க்கவும். இந்த வாக்கியத்தை சிரத்தையுடன் கடைபிடித்தால், அது ஒருவரை

மோட்சத்துக்கு அழைத்துச் செல்லும்” வெளிப்படையாக ஏற்படும் மோதல்களை தவிர்த்து, நுட்பமான மற்றும் மிக நுட்பமான மோதல்களை தவிர்ப்பது எப்படி என்பதை தயவு செய்து விளக்குங்கள்.

**தாதாஸ்ரீ** : ஒருவர் முன்னேறிச் செல்லும் போது, யாரும் அவருக்குக் கற்பிக்க வேண்டியதில்லை, அவராகவே புரிந்து கொள்வார்; அவருடைய உள்ளுணர்வு வளருகிறது. இந்த வார்த்தைகளே ஒருவரை மோட்சத்திற்க்கு அழைத்துச் செல்லும்.

மற்றும் ஒரு முக்கியமான வாக்கியமான, “தவறு பாதிக்கப்பட்டவருடையது” என்பதும் மோட்சத்திற்க்கு வழிவகுக்கும். ஒவ்வொரு வார்த்தையும் ஒருவரை மோட்சத்திற்க்கு அழைத்துச் செல்லும், இது எனது உத்திரவாதம் ஆகும்.

**கேள்வி கேட்பவர்** : நீங்கள் பாம்பு மற்றும் கம்பம் போன்ற ‘வெளிப்படையான’ மோதல்களைக் குறித்த உதாரணங்களைக் கொடுத்துள்ளீர்கள். இப்போது நுட்பமான, மிக நுட்பமான மற்றும் அதிநுட்பமான மோதலின் நிலைகளுக்கு உதாரணம் கொடுப்பீர்களா? நுட்பமான மோதல்கள் என்றால் என்ன?

**தாதாஸ்ரீ** : உங்கள் தந்தையாருடன் நீங்கள் கொள்ளும் மோதல்கள் அனைத்தும் நுட்பமான மோதல்கள் ஆகும்.

**கேள்வி கேட்பவர்** : நுட்பமான மோதல்கள் மனதளவில் ஏற்படுவதா? வாய் தகராறுகளும் நுட்பமான நிலைக்குட்பட்டதா?

**தாதாஸ்ரீ** : அது வெளிப்படையான நிலைக்குட்பட்டது. மற்றவர்கள் அறிய முடியாத, பார்க்க முடியாத மோதல்கள் அனைத்தும் நுட்பமானது.

**கேள்வி கேட்பவர்** : இந்த நுட்பமான மோதல்களை எப்படி தவிர்ப்பது?

**தாதாஸ்ரீ** : முதலில் வெளிப்படையானதையும், பிறகு நுட்பமானதையும், அதற்கு பின் மிக நுட்பமானதையும் கடைசியாக அதிநுட்பமான மோதல்களையும் தவிருங்கள்.

**கேள்வி கேட்பவர்** : மிக நுட்பமான மோதல் என்று எதைக் கருதுவது?

**தாதாஸ்ரீ** : நீங்கள் ஒருவரைத் தாக்குகிறீர்கள் அதை அந்த நபர் ஆத்ம ஞானத்தின் மூலமாக "நான் சுத்தாத்மா. இந்த தாக்குதல். அறிவியல் சூழ்நிலை ஆதாரத்தின் விளைவாக நிகழ்கிறது," என்ற புரிதலுடன் பார்க்கிறார். இப்படி பார்த்தும், அவர் மனதில் சிறிதளவு தவறினை கண்டறிந்தால், அது மிக நுட்பமான மோதல் ஆகும்.

**கேள்வி கேட்பவர்** : தயவு செய்து இதை இன்னொரு முறை விளக்குங்கள். எனக்கு முழுவதுமாகப் புரியவில்லை.

**தாதாஸ்ரீ** : மற்றவர்களிடம் நீங்கள் காணும் எல்லாத் தவறுகளும் மிக நுட்பமான மோதல்களே.

**கேள்வி கேட்பவர்** : அப்படியானால் மற்றவரிடம் காணும் தவறுகள் மிக நுட்பமான மோதல்களா?

**தாதாஸ்ரீ** : அப்படியில்லை. நீங்கள் மற்றவர்கள் மீது தவறே இல்லை என்று தீர்மானித்து இருந்தும், மேலும் தவறுகளை காண்பது என்பது மிக நுட்பமான மோதல்களாகும். இது ஏனென்றால் அவர் ஒரு சுத்தாத்மா, அவரின் தவறுகள் தனியானது.

**கேள்வி கேட்பவர்** : நீங்கள் குறிப்பிடுவது உண்மையில் மனம்சார்ந்த மோதல்களையா?

**தாதாஸ்ரீ** : எல்லா மனம் சார்ந்த மோதல்களும் நுட்பமான நிலைக்குட்பட்டதாகும்.

**கேள்வி கேட்பவர்** : அப்படியானால் இரண்டிற்கும் உள்ள வேறுபாடு என்ன?

**தாதாஸ்ரீ** : இந்த கருத்து மனதிற்கு அப்பாற்பட்டது.

**கேள்வி கேட்பவர்** : அப்படியானால் மிக நுட்பமான மோதல்கள் எங்கு எல்லாம் உள்ளதோ, அங்கே நுட்பமான மோதல்களும் இணைந்து இருக்கும் அல்லவா?

**தாதாஸ்ரீ** : நீங்கள் அதை அந்த நோக்கில் பார்க்கக் கூடாது. நுட்பமான நிலை வேறு. மிக நுட்பமான நிலை வேறு. அதி நுட்பமான நிலையே இறுதிநிலையில் இருக்கிறது.

**கேள்வி கேட்பவர்** : ஒரு முறை சத்சங்கத்தில் (ஆன்மீக சொற்பொழிவு) (வாசிப்பவர்கள் தங்களது பெயரை இங்கே பொருத்திக் கொள்ளவும்) 'சந்தூபாய்' தான் 'நான்' என்ற கருத்தில் ஒன்றிப் போவதே அதிநுட்பமான மோதலாகும், என்று கூறினீர்கள்.

**தாதாஸ்ரீ** : ஆம், அதிநுட்பமான மோதல்! அதை தவிர்த்து விடுங்கள். நீங்கள் கவனக்குறைவாக உடல் - மனது பாகத்தில் ஒன்றிபோய் விடுகிறீர்கள், பின்னர் 'நீங்கள்' (விழிப்படைந்த ஆத்மா) தவறு செய்துவிட்டோம் என்பதை உணருகிறீர்கள்.

**கேள்வி கேட்பவர்** : அப்படியானால், மோதல்களை தவிர்க்க ப்ரதிக்ரமன் மட்டும்தான் ஒரே வழியா? அல்லது வேறு ஏதாவது உள்ளதா?

**தாதாஸ்ரீ** : வேறு சாதனம் ஏதும் இல்லை. நவ கலம் (உயர்ந்த ஆன்மீக உள்நோக்கங்களுக்காக தன்னுள் இருக்கும் சுத்தாத்மா பகவானிடம் சக்தி கோரும் ஒன்பது அறிக்கைகள்), அதுவும் ப்ரதிக்ரமன் தான். ப்ரதிக்ரமனுக்கு மிஞ்சிய சாதனம் இந்த உலகில் ஏதுமில்லை, அதுவே இறுதியான சாதனம். ஏனென்றால் இந்த உலகம் மற்ற உயிர்னங்களின் மேலுள்ள விரோதத்தினாலே தோன்றியிருக்கிறது (அதிக்ரமன்)

**கேள்வி கேட்பவர்** : இது மிகவும் அற்புதமானது. "எது நடந்ததோ அது நியாயமானது", "தவறு பாதிக்கப்பட்டவருடையதே" போன்ற ஒவ்வொரு வாக்கியங்களும் தனிச் சிறப்பானது மற்றும் நாம் தாதாவின் சாட்சியோடு ப்ரதிக்ரமன் செய்தோமானால், கண்டிப்பாக அந்த மனஅதிர்வுகள் (குறிப்பிட்ட நபரை) சென்றடையும்.

**தாதாஸ்ரீ** : ஆம். அது உண்மைதான். அந்த அதிர்வுகள் உடனடியாக (அந்த நபரை) சென்று அடைந்து அதன் பலனை கொடுக்கும். அந்த நபரிடம் நல்ல மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறது என்பதை நாம் உறுதியாக நம்பி சமாதானம் அடையலாம்.

**கேள்வி கேட்பவர்** : தாதா, ப்ரதிக்ரமன் உடனடியாக அந்த நிமிடமே! இது உண்மையில் அற்புதமானது, தாதா! தாதாவின் அருள் அற்புதமானது!

**தாதாஸ்ரீ** : ஆம், இது அற்புதமானது. இது ஒரு விஞ்ஞான விஷயமாகும்.

## ஜெய் சச்சிதானந்தம்

(அழிவற்றிருக்கும் பரம்பொருளை அறிவதே பேரானந்தம்)

**Books of Dada Bhagwan**

| | |
|---|---|
| 1.Adjust Everywhere<br>2.Ahimsa : Non-Violence<br>3.Anger<br>4.Aptavani-1<br>5.Aptavani-2<br>6.Aptavani-4<br>7.Aptavani-5<br>8.Aptavani-6<br>9.Aptavani-8<br>10.Aptavani-9<br>11.Autobiography of Gnani Purush A.M Patel<br>12.Avoid Clashes<br>13.Brahmacharya<br>14.Death : Before, During & After<br>15.Flawless Vision<br>16.Generation Gap<br>17.Harmony in Marriage<br>18.Life Without Conflict<br>19.Money<br>20.Noble Use of Money | 21.Pratikraman<br>22.Pure Love<br>23.Right Understanding to Help Others<br>24.Science of Karma<br>25.Science of Speech<br>26.Shree Simandhar Swami : The Living God<br>27.The Essence Of All Religion<br>28.The Fault Is Of The Sufferer<br>29.The Guru and The Disciple<br>30.The Hidden Meaning Of Truth & Untruth<br>31.The Practice Of Humanity<br>32.Trimantra : The mantra that removes all the worldly obstacles<br>33.Whatever Happened is Justice<br>34. Who Am I ?<br>35.Worries |

- Dada Bhagwan books are availables in different languages: Gujarati, Hindi, English, Marathi, Telegu, Kanada, Oriya, Malayali, Bengali, Punjabi, Assamese, Tamil, German, Spanish, Russian etc
- ‘Dadavani’ Magazine is published every month in three Languages: Gujarati, Hindi, and English.

**www.dadabhagwan.org**

**Dada Bhagwan Parivar**

**Adalaj:** Trimandir, Simandhar City, Ahmedabad-Kalol Highway,
Po/Adalaj, Dist.: Gandhinagar-382421, Gujarat, India.
Tel: +91-9328661166/ 9328661177
Email: info@dadabhagwan.org

| | | | |
|---|---|---|---|
| **Mumbai** | 9323528901 | **Delhi** | 9810098564 |
| **Kolkata** | 9830093230 | **Chennai** | 7200740000 |
| **Jaipur** | 9351408285 | **Patna** | 7352723132 |
| **Bhopal** | 9425024405 | **Amravati** | 9422915064 |
| **Indore** | 9039936173 | **Bangalore** | 9590979099 |
| **Raipur** | 9329644433 | **Hyderabad** | 9989877786 |
| **Chandigarh** | 9780732237 | **Pune** | 9422660497 |
| **Kanpur** | 9452525981 | **Jalandhar** | 9814063043 |
| **Bhubaneswar** | 8763073111 | **Sangli** | 9423870798 |
| **Varanasi** | 9795228541 | | |

| | |
|---|---|
| **U.S.A Dada Bhagwan Vignan Institute**<br>Tel: +1 877-505-DADA(3232)<br>Email:info@us.dadabhagwan.org | **U.K: Dada Darshan (UK)**<br>Tel: +44 330-111-DADA(3232)<br>Email:info@uk.dadabhagwan.org |
| **Germany** :+49 700 32327474<br>**UAE:** +97 1557316937<br>**Kenya:** +25 4722722063<br>**Dubai**: +971 501364530 | **Australia:** +61 421127947<br>**New Zealand:** +6421 0376434<br>**Singapore:** +65 81129229 |

**www.dadabhagwan.org**



## மோதல்களைத் தவிர்க்கவும்

நீங்கள் ஒரு சாலையில் நடக்கும் போது, எப்படி மிகவும் கவனத்துடன் நடந்து செல்கிறீர்கள்! மற்றபடி, வேறொருவர் எவ்வளவு மோசமானவராக இருந்தாலும், மற்றும் அவர் உங்களிடம் மோதி தீங்கு விளைவிப்பது என்பது வேறு விஷயம். இருப்பினும், யாருக்கும் தீங்கு செய்ய கூடாது என்ற உள் நோக்கம் உங்களுக்கு இருக்க வேண்டும். நீங்கள் அவருக்கு தீங்கு செய்ய முயற்சித்தாலும், உங்களுக்குத்தான் தீங்கு உண்டாகும். எனவே, ஒவ்வொரு மோதலிலும், இரு தரப்பினரும் பாதிக்கப்படுகின்றனர். நீங்கள் யாரையாவது துன்பப்படுத்தினீர்கள் என்றால், கண்டிப்பாக அதே சமயத்தில் நீங்களும் வேதனைப்படுவீர்கள்!

எனவே, இந்த போக்குவரத்து விதிகளை உதாரணமாக எடுத்து காட்டியிருக்கிறேன். சாலை விதிகள் எப்படி என்றால், நீங்கள் யாருடனாவது மோதினால், நீங்கள் உயிரிழந்து விடுவீர்கள். மோதலில் ஆபத்து உள்ளது. ஆகையால், யாருடனும் மோதாதீர்கள். அதே போல், உலக விவகாரங்களிலும் மோதல்களில் ஈடுபடாதீர்கள். எனவே, மோதல்களைத் தவிர்க்கவும்.

- தாதாஸ்ரீ



dadabhagwan.org



Printed in India

Price ₹25